மீ ஞ கஷி

# தமிழ் வாசகம்

## ஐந்தாம் புத்தகம்






நா. கனகராஜ ஐயர்

மீனாக்ஷி

# தமிழ் வாசகம்

## ஐந்தாம் புத்தகம்

புதுக்கோட்டை மகாராஜா கல்லூரித் தமிழ்ப் பண்டிதர்
வித்துவான் நா. கனகராஜ ஐயர், B. O. L., அவர்கள்
இயற்றியது



பிரசுரகர்த்தர் :
வி. சூ. சுவாமிநாதன்
மதுரை :: திருநெல்வேலி



[விலை ரூ. 0—7—9




# கடவுள் துதி

(பித்தா பிறை சூடி என்ற தேவாரப் பாடலின் சந்தம்)

எந்தாயருள் இன்பேயருள் இன்றேயருள் இங்கே
வந்தாயருள் வாராயருள் மலைறமேவிய தேவா!
சிந்தாமணி நீயேயுயர் தேஜோமயம் நீயே
செந்தாமரை போலும்நின் செம்பொற்பாதம் அருளே. 1

உண்மை யறிவின்பம் எனும் உருவேயுள பொருளே!
பெண்மையோடும் ஆண்மைஅலி பேணாதுயர் பொருளே!
வன்மையினி லுலகங்களை வாழ்வித்திடு பொருளே!
தன்மையருள் வெள்ளம்பொழிந் தெங்கள்துதி கொள்ளே. 2

வெண்டாமரை போலும் எங்கள் வெள்ளை மனமலரில்
தண்டாமரை போலும் உன்றன் தாள்கள் உறல் தகுமே
கொண்டாடிய அன்பாளரைக் கூடும் திருவாளா!
பண்டானுறவே நின்புகழ் பாடிப்பணி வோமே. 3

எல்லாவகைத் தொழில்கட்குமோர் இறையென்னவே நின்றாய்
எல்லாவகை வலிமைக்குமோர் இடமென்னவே நின்றாய்
எல்லாவகை உயிர்கட்குமோர் யாரென்னவே நின்றாய்
எல்லாவகைக் கலைச் செல்வமும் எங்கட்கருள் எந்தாய். 4

---

 Eighteenth Edition—March 1950—4000 Copies.

பாரதி பிரஸ், மதுரை.

# முன்னுரை

நம் தமிழ் நாட்டில் அநேக தமிழ் வாசகப் புத்தகங்கள் வெளிவந்துள்ளன. ஆயினும் கற்பிக்கவேண்டிய முறைப்படி இதுவரை வெளிவந்துள்ள புத்தகங்களில் இல்லாத சில புதிய பாடங்களுடன், **மீனாக்ஷி தமிழ் வாசகம்** என்னும் வாசக வரிசையை வெளியிடத் துணிந்துள்ளேன். அவற்றுள் முதல் நான்கு புத்தகங்கள் ஏற்கனவே வெளிவந்து அரசாங்கத்தாரால் அங்கீகரிக்கப்பட்டு, பல பாடசாலைகளிலும் உபயோகப்படுத்தப்பட்டு வருகின்றன.

தற்போது இவ்வைந்தாவது புத்தகத்தையும் பாடசாலை அதிகாரிகள் உபயோகப்படுத்தி, எனக்கு ஊக்கமளிப்பார்கள் என்ற துணிவுடன் வெளியிடுகின்றேன். இப்புத்தகத்துள் வேற்றுமை அப்பியாசத்துடன் கூடிய **படப் பழக்கம், விவசாயம், ஐக்கிய நாணயச் சங்கம்** இன்னும் பல பாடங்கள் புதிதாய்ச் சேர்க்கப் பட்டுள்ளன.

இப்புத்தகத்தைப் பிரசுரிக்குமாறு எனக்கு அனுமதி தந்த **வித்துவான் நா. கனகராஜ ஐயர்** அவர்களுக்கு நான் மிகவும் கடமைப் பட்டுள்ளேன். மற்றும் இப்புத்தகம் வெளிவருவதற்கு மிகவும் உதவி புரிந்த கனவான்களுக்கும், இதனைப் பாடப் புத்தகமாக உபயோகிக்கும் பாடசாலை அதிகாரிகளுக்கும் என் மனமார்ந்த வந்தனத்தைச் செலுத்துகின்றேன்.

**வி. சூ. சுவாமிநாதன்**

## பொருள் அடக்கம்

பொங்கும் மங்களம் எங்கும் தங்குக

# மீனாக்ஷி தமிழ் வாசகம்

## ஐந்தாம் புத்தகம்

### 1. தெய்வச் செயல்

நாமொன்று நினைத்தால் தெய்வமொன்று நினைக்கும் என்றபடி, நாம் நினைக்கும் காரியமெல்லாம் நமது விருப்பப்படி நடப்பதில்லை. ஏனெனில் அக்காரியங்களை நமக்குப் புலப்படாத பல காரணங்களாற் கடவுள் வேறு விதமாக மாற்றிவிடுகிறார். அதனால் தான் நமது காரியங்களெல்லாம் நாம் எண்ணியவாறு நிறைவேறுவதில்லை. அதிலும், ஒருவன் மனந்துணிந்து கெட்ட காரியத்தைச் செய்ய ஆரம்பித்தால், அவனுடைய காரியம் தடைப்படுகிறது. இல்லாவிடில் அவனுக்கே கேடு உண்டாகிறது.

திருநெல்வேலியில் ஒரு தனிகர், தம் மனைவியுடன் வாழ்ந்து வந்தார். வெகு காலமாக இவர்களுக்கு மக்கட் பேறில்லை. அதனால் இவர்கள் பல கோவில்களுக்குச் சென்று, கடவுளை வழிபட்டு வந்தனர். இவர்களிடம் கறுப்பன் என்ற ஒரு வேலைக்காரன் இருந்தான். அவனது தாய் தந்தையர் இவர்கள் வீட்டிலேயே வேலைசெய்து வாழ்ந்து வந்தனர்.

ஒரு சமயம் தனிகர் கறுப்பனை அழைத்து, "கறுப்பா! எனக்குத் தற்சமயம் உடம்பு சுகமில்லை.

ஆகையால் என் மனைவிக்குத் துணையாக ஸ்ரீ வைகுண் டம், திருச்செந்தூர் முதலிய இடங்களுக்குச் சென்றுவா. பத்திரம்" என்று கூறி, வழிச்செலவுக்கு வேண்டிய திரவியமும் கொடுத்தார். கறுப்பன் பணத்தை



வாங்கிக்கொண்டு, தனிகருடைய மனைவியை அவருடைய சொந்தக் குதிரை வண்டியில் ஏற்றிக் கொண்டு புறப்பட்டான். வழியில் அவர்கள் ஒரு காட்டைக் கடக்க நேரிட்டது.

அப்போது கறுப்பன் தனக்குள், "நாம் குழந்தைப் பருவம் முதல் வேலை செய்கிறோம். கை

யில் சிறிது பணம்கூடச் சேருகிறதில்லை. இப்பொழுது நமது எஜமானி நிறைய நகைகள் அணிந்து கொண்டிருக்கிறாள். நடுக் காடாகவும் இருக்கிறது. கண்ணுக் கெட்டிய தூரத்தில் ஒருவரையும் காணவில்லை. ஆகையால் இந்த நகைகளைப் பறித்திக்கொண்டால் நமது வாழ்நாள் முழுவதும் பணக்காரனாகவே இருக்கலாம்; இந்தச் சமயம் தவறினால் வேறுசமயம் வாய்ப்பதரிது" என்று யோசித்து, வண்டியைப் பாதையை விட்டு விலக்கி, ஒரு பாழுங் கிணற்றருகில் நிறுத்தினான். நிறுத்தியதும் வண்டியைவிட்டு எஜமானியைக் கீழே இறங்கச்சொல்லி, பலவந்தமாகக் கிணற்றருகில் இழுத்துச் சென்றான்.

சென்றதும் எஜமானியை நோக்கி, "மரியாதையாக உன் நகைகளையெல்லாம் கழற்றிக் கொடுத்துவிடு" என்று கடிந்து கூறினான். இதைக் கேட்ட எஜமானி, "அப்பா கறுப்பா! என்ன சங்கதி? ஏன் இவ்வாறு கூறுகிறாய்? விளையாட்டாகக் கூறுகிறாயா?" என்று நடுங்கிக்கொண்டே கேட்டாள். அதற்குக் கறுப்பன், "விளையாட்டா? உடனே நகைகளைக் கழற்றி வைக்கிறாயா இல்லையா?" என்றான். எஜமானியும் வேறு வழியில்லை யென்று அறிந்து, நகைகளை யெல்லாம் கழற்றி அவனிடம் கொடுத்து, "அப்பா! கறுப்பா! நகைகளை யெல்லாம் நீயே எடுத்துக்கொள். ஆனால் என்னை ஒன்றும் செய்யாமல் விட்டுவிடு" என்று கெஞ்சினாள்.

ஆனால் கறுப்பனது மனமோ சிறிதும் இளகவில்லை. எஜமானியைப் பார்த்து, "உன்னை

உயிருடன் விட்டால், உடனே போலீசாரிடம் கூறி என்னைப் பிடிக்க வழி தேடுவாய். ஆகையால் உன்னைக் கொல்லவே போகிறேன்" என்று கூறி; அவளை நெருங்கினான். எஜமானி எவ்வளவோ கெஞ்சினாள்; கதறினாள்; காலில் விழுந்தாள். ஆனால் கல்நெஞ்சனான கறுப்பனோ சிறிதும் இரங்காது, அவளைக் கிணற்றில் தள்ளினான். அக் கிணற்றில் நீர் சிறிதும் இல்லை.

கறுப்பன் கிணற்றில் எட்டிப் பார்த்தான். எஜமானியின் உயிர் போகாதது கண்டு, அவளைக் கொல்வதற்காகக் கிணற்றருகில் இருந்த ஒரு பெருங் கல்லைப் புரட்டவே, கல்லின் அடியில் இருந்த ஒரு கருநாகம் அவன் காலில் தீண்டியது. உடனே விஷம் தலைக்கேறிக் கறுப்பன் இறந்து விழுந்தான்.

பிள்ளைகளே! கறுப்பன் நினைத்தபடி நடந்ததா பாருங்கள்! ஆகையால் எல்லாம் வல்ல இறைவன் செயலின்படியே யாவும் நடக்கும். சிறிது நேரத்திற்குப் பின், அவ்வழியே வந்த சிலர், எஜமானியைக் கரையேற்றி வீடு சேர்த்தனர். இக்கதையினால் **தன்வினை தன்னைச் சுடும், கெடுவான் கேடு நினைப்பான்** என்ற பழமொழிகளும் உண்மையே என்பது நன்கு விளங்கும்.

---

## 2. ஒட்டகம்

ஒட்டகம் துஷ்டமிருக மன்று. மாடு, குதிரை முதலியவைகளைப்போல் மனிதருக்கு மிகவும் உபயோகம் உள்ளது. அது பாலைவனத்தில் சஞ்ச

ரிக்கும். ஆப்பிரிக்கா, அரேபியா, பாரசீகம், இந்தியா முதலிய நாடுகளில் உள்ள பாலைவனங்களில் அது அதிகமாய்க் காணப்படும். நம் இந்தியாவில், கோவில்கள், மடங்கள், ராஜ சமஸ்தானங்கள் முதலிய இடங்களில் யானையைப்போல், அலங்காரத்துக்காகவும் கௌரவத்துக்காகவும் ஒட்டகம் வளர்க்கப்படுகிறது.



ஒட்டகம் ஒரு விநோதமான மிருகம். அதன் கழுத்து நீண்டு வளர்ந்திருக்கும். கழுத்தை இஷ்டம் போல் நீட்டவும் சுருக்கவும் அதனால் முடியும். தலை சிறியதாய் முகம் நீண்டு இருக்கும். அதன் காதுகள் குறுகலானவை. ஒட்டகத்தின் தேகம் ஒரே சமமாக பிராமல் மேடு பள்ளமுடையதாய் இருக்கும். அதன்

கழுத்து நீண்டு இருப்பதால், உயரமான மரத்தின் இலைகளைத் தின்பதும், தரையில் வளரும் புல் பூண்டு களைத் தின்பதும், அதற்கு மிகவும் எளிது. ஒட்ட கத்தின் கால்கள் நீண்டவையாய்ப் பாதம் அகலமா கவும் பிளவுபட்டும் இருக்கும். ஒவ்வொரு பிளவிலும் ஒரு குளம்பு உண்டு. உள்ளங்கால் பஞ்சு மெத்தை யைப்போல் இருக்கும். அதனால் தான் ஒட்டகம் பாலைவனத்தில் நடக்கும்போது, பாதங்கள் மணலில் புதைகிறதில்லை.

ஒட்டகத்தின் வாய் மிகவும் விசாலமானது. அதற்கு மேல் வாயில் பதினாறு பற்களும், கீழ்வாயில் பதினெட்டுப் பற்களும் உண்டு. மாடுகளைப்போல் ஒட்டகமும் அசைபோட்டு, இலைகளையும், தழைகளை யும் ஆவலாய்த் தின்னும். முக்கியமாய் வேப்பிலை தின்பதில் அதற்கு விருப்பம் அதிகம். அதன் கண் கள் மிகச் சிறியவையாய், மேலே புருவங்கள் தொங் கிக்கொண்டிருக்கும். அதனால் சூரியவெப்பம் அதன் கண்களைத் தாக்காது. ஒட்டகத்தின் நீண்ட முகத் தின் நுனியில் இரு மூக்குத் துவாரங்கள் உண்டு. இம் மூக்குகளுக்கு மூடிகள் இருக்கும். இந்த மூக்கு மூடிகளை ஒட்டகம் பாலைவனத்தில் சஞ்சரிக்கும் போது, மூக்குகளில் மணல் நுழையாதபடி காத்துக் கொள்ளும்.

ஒட்டகம் பழுப்பு நிறமானது. அதன் உடல் முழுதும் குறுகிய ரோமம் அடர்ந்திருக்கும். ஒட்ட கத்தின் முதுகில் திமில் உண்டு. மற்றொரு வகை ஒட்டகத்திற்கு இரண்டு திமில்கள் உண்டு. திமில் என்பது ஒரு சதைத் திண்டு. கொழுப்பு நிறைந்தது.

இத்திமில் சில சமயங்களில் இதற்கு மிக்க உபயோக மாகும். ஒட்டகத்தின் வால் குட்டையாய் நுனியில் சிறிது மயிர் உள்ளதாய் இருக்கும்.

பாலைவனங்கள் பல நூறு மைல்கள் மணல் நிறைந்தவையாகவே இருக்கும். மரம், செடி, கொடி முதலியவை இரா. சூரிய உஷ்ணத்தால் மணல் நெருப்பைப்போல் சுடும். இச் சூடான மணலைக் காற்று வாரி இறைக்கும். ஆகையால் பாலைவனங் களில் பிரயாணம் செய்ய யாவராலும் முடியாது. ஆனல் ஒட்டகமோ ஒரு கஷ்டமுமின்றிப் பிரயாணம் செய்யும். பாலைவனங்களில் சஞ்சரிக்கத் தக்கவாறு அதன் தேகம் அமைந்திருக்கிறது. இதன் உதவி யால் மனிதர்கள், பாரமான சாமான்களுடன், பாலைவனத்தில் சஞ்சரிக்கிறார்கள். அதனுல் தான் ஒட்டகம் பாலைவனக் கப்பல் என்று சொல்லப்படுகிறது.

ஒட்டகம் சாக பட்சணி. ஒரு முறை அது வயிரு ர உண்டால், அதன் பின் ஐந்தாறு நாட்களுக்கு அதற்கு உணவு வேண்டியதில்லை. பல நாட்கள் உணவில்லாவிட்டாலும் அதன் பலம் குறையாது. உணவில்லாத காலத்தில், அதன் திமிலில் உள்ள கொழுப்பே உணவாகிறது என்று சொல்லப்படு கிறது. பல நாட்களுக்கு வேண்டிய தண்ணீரையும் அது ஒரே முறையில் பருகும். வேண்டிய அளவு தண்ணீரைத் தன் இரைப்பையின் ஒரு பாகத்தில் நிரப்பிக்கொள்ளும். சில சமயங்களில் அதன்மேல் பிரயாணம் செய்யும் மனிதர் குடிக்கத் தண்ணீர் கிடைக்காமல் வருந்துங்கால், ஒட்டகத்தைக்

கொன்று, அதன் வயிற்றிலுள்ள தண்ணீரைக் குடிப்பர்.

ஒட்டகம் மனிதர்க்குப் பலவிதத்திலும் பயன்படுகிறது. பாரமான சாமான்களையும், மனிதர்களையும் சுமந்துகொண்டு, பாலைவனத்தில் விரைந்து செல்லும். அரபி வியாபாரிகள் ஒட்டகத்தின் மேல் தங்கள் சரக்குகளை ஏற்றிக்கொண்டு, பலவிடங்களுக்கும் சென்று வியாபாரம் செய்துவருவார்கள். ஒட்டகத்தின் பாலை அரபியர் குடிப்பார்கள். அதன் மாமிசத்தையும் புசிப்பார்கள். ஒட்டகத்தின் மயிரினல் சித்திரம் வரையும் தூரிகை (Brush) யும் மிருதுவான கம்பளங்களும் செய்யப்படுகின்றன.

---

## 3. கரடியும் ராஜகுமாரனும்

மாளவ தேசத்தைப் போஜராஜன் என்ற அரசன் ஆண்டுவந்தான். அவனது தலைமை நகரம் உஜ்ஜயினீ. உலகம் புகழும் காளிதாச மகா கவி அவனது சமஸ்தான வித்துவான். ஒரு சமயம் அரசனுக்கும் காளிதாசனுக்கும் வாக்குவாதம் ஏற்பட்டதனல் காளிதாசன் அந்நாட்டை விட்டு வெளியேறினன்.

போஜனுக்கு ஒரு குமாரன் உண்டு. அவன் ஒருநாள் வேட்டையாடக் காட்டுக்குச் சென்ருன். பகல் முழுதும் காடெல்லாம் சுற்றி வேட்டையாடி, மாலையில் ஊருக்குத் திரும்பும்போது வழி தவறி அலைந்து முடிவில் ஒரு மரத்தடியில் வந்து தங்கினன். அப்போது நன்ருய் இருட்டி விட்டது. சந்திரனும் வானத்தில் தோன்றினன். திடீரென்று ஒரு புலி

உறுமும் சத்தம் கேட்டது. ராஜகுமாரன் பயந்து, ஒரு மரத்தில் ஏறினன். புலியும் மரத்தடியில் வந்து சேர்ந்தது. மரத்தின் மேல் ஏறிய ராஜகுமாரன் மரக்கிளைகளில் படுத்துறங்க இடம் தேடினன். அங்கு ஒரு கிளையில் பெரிய கரடி ஒன்று படுத்திருப்



பதைக் கண்டு, மிகவும் பயந்து நடுங்கினன். கீழே புலியோ உறுமிக் கொண்டிருக்கிறது. "ஐயோ! கடவுளே! எங்குப் பார்த்தாலும் ஆபத்தாய் இருக்கிறதே, என் செய்வேன்" என்று மனங்கலங்கினன்.

ராஜகுமாரன் பயந்து நடுங்குவதைக் கண்ட கரடி, "ஏ மனிதனே! பயப்படாதே. நான் உன்னை ஒன்றும் செய்யவில்லை. தைரியமாய் ஏறி வா. என்

மடியிற் படுத்துச் சுகமாய்த் தூங்குவாய்" என்றது. ராஜகுமாரனும் அந்த நிலைமையில் வேறு ஒன்றும் செய்யத் தோன்றாதவனாய், மேலே ஏறிச் சென்று கரடியின் மடியிற் படுத்துத் தூங்கினான்.

புலிக்கு மரம் ஏறத் தெரியாதல்லவா? ஆகையால் மரத்தடியில் இருந்த புலி, கரடியைப் பார்த்து, கரடியே! இந்த அரசகுமாரன் நம்மையும் நம்மைப் போன்றவர்களையும் வேட்டையாடிக் கொல்லவே காட்டில் வந்தவன். அவனைக் கீழே தள்ளிவிடு. நமது விரோதியை நான் கொன்று தின்றுவிடுகிறேன்" என்று கூறியது. அதற்குக் கரடி, "புலியே! எனது ஜன்ம விரோதியாயினும், என்னிடம் அடைக்கலம் புகுந்தவனை மோசம் செய்து கொல்ல நினைப்பது பெரும் பாவம். ஆகையால் நான் அவனைக் கீழே தள்ளமாட்டேன். நீ வீணாகக் காத்திருக்க வேண்டாம்; போகலாம்" என்று கண்டித்துக் கூறியது. புலியோ மரத்தடியை விட்டுப் போகவே இல்லை.

தூங்கிய ராஜகுமாரன் சிறிது நேரத்தில் விழித்துக்கொண்டான். கரடி நடந்தவற்றை யெல்லாம் அவனிடம் சொல்லி, "நண்பனே! எனக்கும் தூக்கம் வருகிறது. நான் தூங்குகிறேன். கீழே புலி இருக்கிறது. ஜாக்கிரதையாய் இரு" என்று சொல்லிவிட்டுத் தூங்க ஆரம்பித்தது. சிறிது நேரங் கழித்துப் புலி ராஜகுமாரனை நோக்கி, "ஏ மனிதனே! உன் நிலைமைக்கு நான் மிகவும் வருந்துகிறேன். ஐயோ! பாவம். கரடியின் வஞ்சகம் தெரியாமல் நீ அதனிடம் அகப்பட்டுக்கொண்டாய்.

அது தூங்கி விழித்ததும் ஆவலோடு உன்னைக் கொன்று தின்னப்போகிறது. அதன் வஞ்சக வார்த்தைகளை நம்பி, நீ அதன் பக்கத்தில் இருக்கிறாயே. ஆபத்து வருமுன் காத்துக்கொள்ள வேண்டாமா? உடனே கரடியைக் கீழே தள்ளிவிடு. அதைத் தின்றுவிட்டு நான் போகிறேன்; எனக்கும் பசியாறும்; உனக்கும் பகை தீரும்" என்று வஞ்சகமாய்க்கூறியது. இதைக் கேட்ட ராஜகுமாரன் முன் பின் யோசியாமல் கரடியைக் கிளையிலிருந்து தள்ளி விட்டான்.

ஆனல் கரடியோ உண்மையில் தூங்கவில்லை. ராஜகுமாரன் தள்ளியதும், வேறொரு கிளையைப் பிடித்துக்கொண்டு, மேலே ஏறி அவனை நெருங்கியது. அது கண்ட ராஜகுமாரன் நடுங்கினன். கீழே இருந்த புலியும் ஓடிவிட்டது. கரடி அவனை நோக்கி, "நன்றியில்லா மனிதனே! பயப்படாதே! உன்னைக் காப்பாற்றிய என்னைப் புலிக்கு இரையாக்க எண்ணினய். நன்றி மறத்தல் கொடிய பாவம். எந்த தர்ம சாஸ்திரத்திலும் இதற்குப் பரிகாரம் கிடையாது. உன்னை நான் ஒன்றும் செய்யப்போவதில்லை. காலையில் நீ சௌக்கியமாய் இம்மரத்தை விட்டு இறங்கிச் செல். உன் பாவத்தால் உனக்குப் பைத்தியம் பிடிக்கும். ஸஸேமிரா என்று சொல்லிக் கொண்டே திரிவாய்" என்று சொல்லிப் போய் விட்டது.

கரடி கூறியபடியே ராஜகுமாரன் காலையில் மரத்தைவிட்டு இறங்கினவுடன் அவனுக்குப் பைத்தியம் பிடித்துவிட்டது. 'ஸஸேமிரா' என்று

சொல்லிக்கொண்டே காட்டில் அலைந்து திரிந்தான். வேட்டையாடச் சென்ற குமாரன் திரும்பி வராததால், அரசன் தன் ஆட்களை ஏவி அவனைத் தேடினான். ஆட்களில் சிலர் 'ஸஸேமிரா' என்று சொல்லிக்கொண்டே திரிந்த அரச குமாரனைக் கண்டு, அரசனிடம் கொண்டு சேர்த்தனர்.

அரசன் தன் குமாரனுடைய பைத்தியத்தைத் தெளிவிக்கப் பல வழிகளிலும் முயன்றான். கை தேர்ந்த பண்டிதர் வைத்தியம் செய்தனர்; மந்திரம் வல்லவர் மாந்திரீகம் செய்தனர். ஒன்றிலும் அவனது 'ஸஸேமிரா' என்ற சொல்லுடன் கூடிய பைத்தியம் தீரவில்லை. கடைசியில், நாட்டைவிட்டு வெளியே சென்றிருந்த காளிதாசன் திரும்பி வந்து, நான்கு சுலோகங்கள் பாடி, ராஜகுமாரனுடைய பைத்தியத்தைத் தெளிவித்தான்.

1. நன்றி மறப்பது நன்றன்று ; நன்றல்லது
அன்றே மறப்பது நன்று.

2. எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம்; உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு. —திருக்குறள்.

---

## 4. பட்டு

பருத்திப் பஞ்சிலிருந்து நெய்யப்பட்ட ஆடைகளை, ஏழைகள் முதல் எல்லோரும் உடுத்துகின்றனர். ஆனால் பணம் உள்ளவர்கள் பட்டு ஆடைகளை அணிகிறார்கள். பட்டு ஆடைகள் பளபளப்பாகவும், மிருதுவாகவும் இருக்கும். இதன் காரணம் என்ன? பட்டு நூல் ஒருவகைப் பூச்சியால் நூற்கப்படுவதாகை

யால் பட்டு மிருதுவாயும் பளபளப்பாயும் இருக்கிறது. இப் பூச்சியைப் பட்டுப் பூச்சி என்று சொல்லுகிறார்கள். இது எப்படி உற்பத்தியாகிறது என்பதைப் பற்றிக் கவனிப்போம்.




தாய்ப்பூச்சி முசுக்கட்டை இலையின்மேல், கடுகு போல் சிறுத்த முட்டைகளை இடும். அம்முட்டைகள் சுமார் இருநூறு முதல் நானூறு வரை இருக்கும். அம் முட்டைகளெல்லாம் சூரிய உஷ்ணத்தினால் பொரிந்து, புழுக்கள் வெளிப்படும். முட்டையிலிருந்து வெளிப்பட்ட புழு சுமார் அரைக்கால் அங்குல நீள முள்ளதாகவும், சாம்பல் நிறமாயுமிருக்கும். அப் புழு முசுக்கட்டை இலையைத் தின்று வளர்ந்து, ஒரு வாரத்தில் நன்றாய்ப் பருத்துவிடும். பிறகு தன் தோலை உரித்துக்கொண்டு வெண்மை நிறமாகும். இந்தப்படியே அப்புழு ஐந்தாறு நாட்களுக்கு ஒரு முறையாக நாலைந்து தடவை தன் தோலை உரித்துக் கொள்ளும். வெண்மையாய் இருந்த புழு, தோல்

உரிய உரிய, மஞ்சள் நிறமாக மாறிக் கடைசியில் பசுமை நிறமாய் விடும். உடனே முசுக்கட்டை இலைகளைத் தின்பதை நிறுத்திவிடும்.

இச் சமயம் பட்டுப் புழு ஒன்றரை அல்லது இரண்டு அங்குல நீளமுள்ளதாய் இருக்கும். அப் புழு முசுக்கட்டைச் செடியின் கிளையில் தன் கூட்டைக் கட்டிக்கொள்ளும். அதற்காக அது, தன் வாயின் கீழுள்ள துவாரங்கள் வழியாக ஒருவகைப் பிசினை வெளிப்படுத்தும். இந்தப் பிசின் மஞ்சள் நிறமாகவும் பளபளப்பாகவும் இருக்கும். இப்பிசினி லிருந்து நூல் நூற்றுத் தானும் உள்ளே இருந்து கொண்டே தன் தேகத்தை மறைக்கும்படியான ஒரு கூட்டைக் கட்டிக்கொள்ளும். இதற்கு மூன்று நான்கு தினங்களாகும். இப்படிக் கட்டிய கூடு முட்டை வடிவமாயிருக்கும். கூட்டில் அடைபட்ட புழு மறுபடியும் ஒரு தரம் தோலுரித்துப் பொன் னிறம் அடைகிறது.

பின் அப்புழு தன் கூட்டுக்குள்ளேயே பதினைந்து இருபது தினங்கள், தன்னை மறந்து உறங்கிக் கிடக்கும். இந்த உறக்கமே அதன் வளர்ச் சிக்கு மிகவும் உதவியாய் இருக்கின்றது. கூட்டுக்குள் இருக்கும்போது, நாளாக ஆக, உருவம் மாறிக் கொண்டே வந்து கடைசியில் இறகு முளைத்த பட்டுப் பூச்சியாகிக் கூட்டைத் துளைத்துக்கொண்டு வெளி யேறுகிறது. இதுவே பட்டுப் பூச்சியின் இயற்கை வளர்ச்சி.

இவ்வாறு பூச்சியை வெளியேற விட்டால் பட்டு, சின்னபின்னமாய் அறுந்து போகும். அந்தப் பட்டு

ஒன்றுக்கும் உதவாது. ஆகையால் பூச்சி உள்ளிருக்கும்பொழுதே, கூட்டை வெந்நீரில் போட்டுப் பூச்சியைக் கொன்று, பட்டு நூலை எடுத்துக்கொள்வார்கள். தேனீ தனது தேனுக்காக உயிரைக் கொடுப்பதுபோல், பட்டுப் பூச்சியும் பட்டுக்காகத் தனது உயிரைக் கொடுக்கிறது. இவ்வாறு எடுத்த பட்டை, சவுக்காரம் கலந்த தண்ணீரில் கழுவிச் சுத்தப்படுத்துவார்கள். பிறகு அதன் நுனியைக் கண்டுபிடித்து, கழிகளில் சுற்றுவார்கள். சுமார் இரண்டாயிரம் கூடுகளிலிருந்து ஒரு ராத்தல் பட்டுக் கிடைக்கும். இந்தப் பட்டிலிருந்துதான் புடவைகளும், வஸ்திரங்களும் நெய்யப்படுகின்றன.

இந்தப் பட்டுப் பூச்சி முதலில் நம் நாட்டில் இருக்கவில்லை. சீன தேசத்தில் மட்டும் இப்பூச்சிகளை வளர்த்துப் பட்டாடைகள் நெய்து, நல்ல லாபம் சம்பாதித்து வந்தனர். பின்னர் ஐரோப்பியப் பாதிரிகள் மூலம் இது பல தேசங்களுக்குப் பரவலாயிற்று. இப்பொழுது உலகத்தில் இப்பூச்சிகளை வளர்க்காத தேசம் இல்லை. நமது தேசத்தில் வங்காளம், மைசூர், பர்மா, காஷ்மீரம் முதலிய இடங்களிலும் பட்டு கிடைக்கிறது. நமது ராஜதானியில் காஞ்சீபுரம், கொள்ளேகாலம், பெங்களூர், பெத்தாபுரம் முதலிய இடங்களில் பட்டாடைகள் நெய்யப்படுகின்றன.

---

## 5. பத்மினி

ராஜபுதன ராஜ்யத்தில் மிகவும் சிறந்து விளங்கியது மீவார். அதன் தலைநகரம் சித்தூர். அதனை பீம்சிங்

என்னும் ராணா ஆண்டு வந்தான். அவனுடைய மனைவியின் பெயர் பத்மினி. அவள் அழகிற் சிறந்தவள். அவளுடைய அழகைக் கொண்டாடாதவர் இல்லை.

அச்சமயம் டில்லியில் அலாவுதீன் என்னும் மகம்மதிய சுல்தான் அரசாண்டு வந்தான். அவன் பத்மினியின் அழகைப் பற்றிக் கேள்விப்பட்டு, அவளைத் தன் மனைவியாய் அடைய எண்ணங் கொண்டான். உடனே தன் படைகளுடன் சென்று, சித்தூரை முற்றுகை யிட்டான். பத்மினியைத் தன்னிடம் கொணர்ந்து ஒப்புவித்துவிட்டால், முற்றுகையை நிறுத்தி விடுவதாக ராணாவுக்குக் கடிதம் எழுதினான்.

ஆனால் பீம்சிங் சுத்த வீரனாகையால் இவனுடைய கடிதத்தை லக்ஷியம் செய்யாமல் யுத்தத்திற்குத் தயாரானான். அலாவுதீனும் சித்தூரைக் கடுமையாய் முற்றுகை யிட்டான். முற்றுகை வெகுநாள் வரை நடந்தும் ராஜபுத்திரர்கள் சிறிதும் இணங்கவில்லை. தன் முற்றுகை யாதொரு பலனும் அளிக்காதது பற்றி, அலாவுதீன் ஒரு சூழ்ச்சி செய்தான். பத்மினியின் காரணமாகவே தான் சண்டை ஆரம்பித்ததாகவும், தான் ஒரு தடவை கண்ணார அவளைப் பார்த்தால் மட்டும் போதும் என்றும், உடனே முற்றுகையை நிறுத்திச் சமாதானமாகப் போய்ச் சேருவதாகவும் ஒரு கடிதம் விடுத்தனன். இதைக் கேட்ட ராஜபுத்திரர் கடுங்கோபங்கொண்டு, அவ்வாறு செய்ய மறுத்துவிட்டனர்.

சில நாட்கள் கழிந்தன. கோட்டைக்குள் ஆகார பதார்த்தங்கள் குறைந்தன. இன்னும் சில நாட்களில் கோட்டைக்குள் இருப்பவர் எல்லோரும் இறக்க நேரிடும் என்று பீம்சிங் மனதில் தோன்றியது. தன் சிறந்த ஆட்களை இழக்க ராணு விரும்பவில்லை. ஆகையால் உடனே அலாவுதீனுக்கு ஒரு கடிதம் எழுதினன். அதில் அலாவுதீன் பத்மினியை நேரிற் காணமுடியாதென்றும் ஆனல், அவள் உருவத்தைமட்டும் நிலைக்கண்ணுடியில் காணலாமென்றும் எழுதினன். அலாவுதீனும் இதற்குச் சம்மதித்து முற்றுகையை நிறுத்தினன்.

குறித்த தினத்தில் அலாவுதீனும் பத்மினியின் உருவத்தை நிலைக்கண்ணுடியிற் கண்டான். கெட்ட எண்ணங் கொண்டான். பிறகு பீம்சிங் அலாவுதீனை வழியனுப்பக் கோட்டைக்கு வெளியே சிறிது தூரம் சென்ருன். சென்றதும், அலாவுதீனது வீரரிற் சிலர் திடீரெனப் பாய்ந்து, பீம்சிங்கைச் சிறைப் படுத்தினர். பத்மினியை அளித்தால் ராணுவை விடுவிப்பதாக அலாவுதீன், கோட்டைக்குச் செய்தியனுப்பினன்.

இச்செய்தி கேட்ட ராஜபுத்திரர் மிகவும் வருந்தித் தங்கள் தலைவனை விடுவிக்க, ஒன்று கூடி ஆலோசித்தனர். முடிவில், தனது தோழிகளுடன் பத்மினி பல்லக்கில் வருவாளென்றும், ஆனல் கடைசி முறையாக பீம்சிங்கைப் பார்த்துவிட்டுத் தான் அலாவுதீனிடம் வருவாளென்றும், பதில் சொல்லியனுப்பினர். சுல்தானும் அதற்குச் சம்மதித்தான். அதன்படியே சித்தூர்க் கோட்டையிலி

ருந்து, பெண்களால் சுமக்கப்பட்ட பல மூடு பல்லக்குகள் புறப்பட்டு, சுல்தானின் கூடாரங்களை நெருங்கின. பீம்சிங்கின் கூடாரத்திற்குப் பத்மினியின் பல்லக்கு எடுத்துச் செல்லப்பட்டது. மற்றவை வெளியே தங்கின.

அலாவுதீனோ தனது கூடாரத்தில் வெகு நேரமாய்ப் பத்மினியின் வரவை எதிர்பார்த்தும் பத்மினி வராதது கண்டு கோபங்கொண்டு ராணாவையும் பத்மினியையும் பிடித்துவர உத்திரவிட்டான். அவர்களைப் பிடிக்கச்சென்ற வீரர்கள் அங்கே ராணாவையும் பத்மினியையும் காணாமல் பல்லக்குகளையும் அவற்றைத்தூக்கி வந்த பெண்களையும் மட்டும் கண்டு அவற்றைச் சோதிக்க விரும்பினர். ஆனால் திடீரென்று பல்லக்குகள் சுமந்து வந்த பெண்களும், அவைகளுள் இருந்த பெண்களும் யுத்த வீரர்களாக மாறி, மகமதிய வீரரைக் காயப்படுத்தித் துரத்தி விட்டனர்.

ஆனால் ராணாவும் பத்மினியும் எங்கே? தோழிகளும் பல்லக்குத் தூக்கிய பெண்களும் எப்படி வீரராகமாறினர்! பத்மினி அங்கே வரவே இல்லை. தோழிகளும் மற்றவர்களுமாக வந்தவர்கள் பெண் வேஷம் தரித்த சுத்த வீரர்களே. இந்தக் கலவரம் ஏற்படுமுன்னேயே, ராணா ரகசியமாகக் குதிரையேறி, சித்தூர்க் கோட்டைபோய்ச் சேர்ந்தான்.

இவ்வாறு அவமானப்பட்ட அலாவுதீன் கோபாவேசத்துடன் சித்தூரை மறுபடியும் முற்றுகையிட்டான். ராஜபுத்திரர்கள் கோட்டையை விட்டு

வெளியே வந்து, யுத்தம் புரிந்து மடிந்தனர். பீம்சிங்கும் கொல்லப்பட்டான். கோட்டைக்குள் இருந்த ராஜபுத்திர ஸ்திரீகள் யாவரும் மகமதியர்களால் அவமானப்படுவதற்கு அஞ்சி அக்னிப் பிரவேசம் செய்தனர். பத்மினியைக் காணக் கோட்டைக்குள் நுழைந்த அலாவுதீன், அவளது சாம்பலைக்கூடத் தெரிந்துகொள்ள முடியவில்லை. இக்கதையினல் ராஜபுத்திரர் சுத்த வீரர் என்பதும் அவர்களது ஸ்திரீகள் தங்கள் மானத்தைக் காப்பாற்றிக் கொள்வதற்காகத் தைரியமாய் உயிரையும் இழக்கத் துணிந்திருப்பார்கள் என்பதும் நன்கு விளங்கும்.

---

## 6. நீராவியின் சக்தி

சங்கரன் ஒரு விளையாட்டுப் பையன். ஒரு நாள் கையில் புத்தகத்தை வைத்துக்கொண்டு உட்கார்ந்திருந்தான். திடீரென்று சமையலறையில் 'பட் பட்' என்ற ஓசை உண்டாயிற்று. உடனே அவன், 'இது என்ன பார்ப்போம்' என்று எழுந்தோடினன். சமையலறையில் ஒரு கரியடுப்பு எரிந்துகொண்டிருந்தது. அதன் மேல் ஒரு கெட்டிலில் வெந்நீர் காய்ந்து கொண்டிருந்தது. வெந்நீர் மிகவும் கொதித்துவிட்டதால், கெட்டிலின் மேல்மூடி தூக்கித் தூக்கிப் போடப்பட்டது.

உடனே சங்கரன் அதில் ஒரு வேடிக்கை செய்ய எண்ணங்கொண்டான். பக்கத்திலே கிடந்த காகிதத்தால், கெட்டிலின் வளைந்த வாயை அடைத்தான். ஒரு நிமிஷ நேரத்தில் கெட்டிலின் மூடி

மேலே கிளம்பி, அவன் காலடியில் வந்து விழுந்தது. உடனே சங்கரன், "ஓகோ! உனக்கு அவ்வளவு பலமா?" என்று சொல்லி, காகிதத்தைப் பிடுங்கி, எறிந்துவிட்டு, கெட்டிலின் மேல் மூடியை அழுத்திப் பிடித்துக்கொண்டான். உடனே வளைந்த வாயின் வழியாய்க் 'குப் குப்' என்று ஆவி புறப்பட்டது. தனது கற்பலகையை ஆவியில் காட்டி எடுத்தான். கற்பலகையில் தண்ணீர் சிறிது படிந்திருந்தது. சங்கரன் கற்பலகையில் இருந்த எழுத்துக்களை அழித்துவிட்டு புதுக் கணக்குப்போடத் தயாரானன்.

இதற்குள் அவன் தாயார் வந்து "சங்கரா! சமையலறையில் என்ன செய்கிருய்?" என்று



கேட்டாள். சங்கரன்," அம்மா! ஒன்றுமில்லை. இங்கே கெட்டில் 'பட் பட்' என்று அடித்துக் கொண்டது. அதன் காரணம் என்னவென்று பார்த்தேன்" என்ருன். தயார், "நீ என்ன அறிந்துகொண்டாய்?" என்று கேட்டாள். சங்கரன் தான் செய்ததை யெல்லாம் சொல்லி, 'ஆவி கெட்டி

னுக்குள் அடங்காமல் வெளியே புறப்படுகிறது" என்றான். அதைக் கேட்ட அவனது தாய், அவனை அவன் தந்தையிடம் கொண்டுபோய்விட்டு, நடந்ததைக் கூறினாள்.

தந்தை:— கெட்டிலிலிருந்து வெளியே புறப்பட்டது என்ன தெரியுமா?

சங்கரன்:— அப்பா! ஒருவிதமான ஆவிதான் வெளியே வந்தது. ஆனால் அது என் கற்பலகையில் பட்டதும் தண்ணீராய் மாறிவிட்டது.

தந்தை:— சங்கரா! அதுதான் நீராவி. தண்ணீர் கொதித்ததனால் ஆவியாக மாறியது. அது குளிர்ந்த உன் கற்பலகை மேல் பட்டதும் தண்ணீராய்விட்டது. அது ஏன் வெளியே வந்தது?

சங்கரன்:—வளைந்த வாயைக் காகிதத்தினால் அடைத்த போது ஆவி கெட்டிலின் மூடியைத் தூக்கி எறிந்தது. பிறகு காகிதத்தை எடுத்துவிட்டு, மூடியை அழுத்திப் பிடித்துக்கொண்டபோது, வளைந்த வாயின் வழியாய் நீராவி 'குப் குப்' என்று வெளியேறியது. அது உள்ளே அடங்க முடியாமல் வெளியேற வழி பார்க்கிறது என்று அறிந்தேன்.

தந்தை:—இன்று நீ கண்டவை முக்கியமான விஷயங்களே. இப்படி உண்டாகும் சிறிது நீராவிக்கு, கெட்டிலின் மூடியைத் தூக்கி எறியும் சக்தி இருக்கிறதே. இதே மாதிரி பெரிய பாத்திரத்தில் தண்ணீரைக் கொதிக்க வைத்து நீராவி உண்டாக்கினால், அந்த நீராவியினால் பெரிய காரியங்களைச் செய்யலாமல்லவா?

சங்கரன்:— செய்யலாம் என்றுதான் தோன்றுகிறது. அப்படி யாராவது செய்து பார்த்திருக்கிறார்களா?

தந்தை:— சங்கரா! ஸ்காட்லாந்து தேசத்திலே உன்னைப்போன்ற ஒரு சிறு பையன், நீ இன்று கெட்டிலில் நீராவியின் சக்தியை அறிந்தது போலவே அறிந்தான். அவன் பெயர் ஜேம்ஸ் வாட். அவன் பிறகு நீராவியைப் பெரிய பாத்திரங்களில் அடைத்துப் பரிசோதித்தான். பல விதப் பரிசோதனைகள் செய்து கடைசியில் நீராவியின் சக்தியினால் வேலை செய்யும் சிறிய யந்திரங்கள் செய்து பலருக்கும் காட்டினான். பிறகு அவனுக்கு உதவியாகப் பலர் சேர்ந்தனர். அவர்கள் சேர்ந்து வேலை செய்யவே, இப்போது நாம் காணும் பலவகைப் பெரிய யந்திரங்கள் உண்டாயின.

சங்கரன்:— இரும்புத் தண்டவாளங்களின் மேல் ஓடுகிற புகைவண்டி நீராவியின் சக்தியால் தானே ஓடுகிறது. இதை யார் செய்தது? தான் ஓடுவதோடு, அநேக வண்டிகளையும் இழுத்துக் கொண்டு போகிறதே.



தந்தை:— ஆம், நீராவியின் சக்தியினாலேதான்; அது மற்ற வண்டிகளையும் இழுத்துக்கொண்டு செல்லுகிறது. இதை முதல் முதல் செய்தவன் ஜ்யார்ஜ் ஸ்டீவென்ஸன் என்பவன். அவன் செய்த வண்டியின் பெயர் ராக்கெட் என்பது. இக்-

காலத்தில் பல சீர்திருத்தங்களுடன், அதிவேகமாய் ஓடக்கூடிய அழகான புகை வண்டிகள் செய்யப்படுகின்றன.

சங்கரன்:— இந்த வண்டிகளால் நமக்கென்ன பிரயோஜனம்?

தந்தை:— இதன் உதவியால் ஆயிரம் மைலுக்கு அப்பால் உள்ள ஒரு சுற்றத்தாரை இரண்டு மூன்று தினங்களில் நாம் பார்க்கலாம். தேசத்தின் எப்பக்கத்தில் இருப்பவர்க்கும் நாம் கடிதம் எழுதினல், அது இந்தப் புகைவண்டியின் உதவியால் சீக்கிரம் கொடுக்கப்படும். அவர்களிடமிருந்து நமக்கும் கடிதம் சீக்கிரம் வந்து சேரும். ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குச் சகலவிதமான சாமான்களும் கொண்டுபோகப்படுகின்றன. இதனல் வியாபாரம் அதிகமாகி, ஜனங்களுக்கும் சௌகரியமேற்படுகிறது.

சங்கரன்:— இக்காலத்தில் நீராவியை எந்தெந்தக் காரியங்களுக்கு உபயோகிக்கிறார்கள்?

தந்தை:— சமையல் செய்வதற்கும் மிகவும் பாரமான சாமான்களை அதிக உயரம் தூக்குவதற்கும் சிப்பங்கள்முதலியவைகளை அழுத்திக் கட்டுவதற்கும் உபயோகப் படுத்துகிறார்கள். தவிரவும் இதன் உதவியால் கப்பல்கள் கடலில் செல்லுகின்றன. அவைகளை நீராவிக் கப்பல் என்று சொல்லுவார்கள்.



சங்கரன்:— அப்பா! இன்று அநேக விஷயங்கள் தெரிந்து கொண்டேன். பள்ளிக்கூடம் போக நேரமாகிறது, போய்வருகிறேன்.

---

## 7. பகாசுரன் கதை

வட இந்தியாவில் டில்லி நகரம் இருக்கிறது. இது முன் காலத்தில் அஸ்தினபுரம் என்னும் பெயர் கொண்டிருந்தது. அதன் அரசன் திருதராஷ்டிரன் என்னும் பிறவிக் குருடன். ஆகையால் அவனுடைய தம்பியாகிய பாண்டுவே ராஜ்யத்தை ஆண்டு வந்தான். திருதராஷ்டிரனுக்கு, கௌரவர் என்று நூறு பிள்ளைகள் இருந்தனர். அவர்களில் மூத்தவன் துரியோதனன். பாண்டுவுக்கு தருமன், பீமன், அர்ச்சுனன், நகுலன், சகாதேவன் என்ற ஐந்து பிள்ளைகள் இருந்தார்கள். எல்லாப் பிள்ளைகளும் ஒன்றுசேர்ந்து விளையாடுவார்கள். சில சமயத்தில் சண்டை செய்வார்கள். அப்போதெல்லாம் பீமனே மற்றவர்களை வெல்லுவான். இதனால் பொறாமைகொண்ட துரியோதனன் பீமனைக் கொல்ல வழிதேடினான். ஆனால் பீமன் அவன் செய்த பல சூழ்ச்சிகளினின்றும் தப்பினான்.

பின்பு துரியோதனன் பாண்டவர் ஐவரையும் ஒரே சமயத்தில் கொல்ல எண்ணினான். அதற்காகவே அரக்கு, பஞ்சு, மெழுகு முதலிய எளிதில் தீப்பிடிக்கத்தக்க பொருள்களால் ஒரு மாளிகை கட்டினான். பாண்டவர்களை அதில் போய் வசிக்கச் செய்து, நடு இரவில் அதற்கு நெருப்பு வைக்க ஏற்

பாடு செய்தான். துரியோதனனுடைய சூழ்ச்சியை அறிந்த பீமன், தானே அந்த மாளிகைக்கு நெருப்பு வைத்துவிட்டுத் தன் சகோதரர்களையும் தாயையும் ஒரு காட்டுக்குத் தூக்கிக்கொண்டு சென்றான். அங்கே பீமன் இடும்பன் என்னும் அசுரனைக் கொன்று, அவன் தங்கையாகிய இடும்பியைக் கலியாணம் செய்து கொண்டான். கடைசியில் பாண்டவர்களும் அவர்களது தாயும் பிராமணர் போல் வேஷம் அணிந்து வேத்திரகீயம் என்னும் ஊரில் ஒரு வேதியர் வீட்டில் தங்கியிருந்தனர்.

ஒரு நாள் அந்த வீட்டுக் கிழவி புலம்பி அழுது கொண்டிருந்தாள். அப்போது பாண்டவரின் தாயாகிய குந்திதேவி அவளைப் பார்த்து, "அம்மா! நீ ஏன் வருந்தியழுகிறாய்? உனக்கு என்ன கஷ்டம் நேர்ந்தது?" என்று கேட்டாள். அதற்கு அவள், "தாயே! இவ்வூருக்கு அருகில் ஒரு மலை இருக்கிறது. அதில் பகாசுரன் என்ற ராக்ஷசன் இருக்கிறான். சில வருஷங்களுக்கு முன், அவன் இவ்வூருக்குள் அடிக்கடி புகுந்து ஜனங்களைக் கொன்று தின்று வந்தான். இந்த ஊரார் அவனிடம் சென்று, 'அசுரனே! அடிக்கடி எங்களை இப்படிக் கஷ்டப்படுத்த வேண்டாம். தினந்தோறும் ஒரு இரட்டைமாட்டு வண்டி நிறையச் சோறு, பதார்த்தங்கள் முதலியனவும் அதை ஓட்டிவர ஒரு மனிதனையும் அனுப்புகிறோம். நீ எல்லாவற்றையும் புசித்து இக்காட்டிலேயே சுகமாய் இருக்கலாம்' என்று வேண்டிக்கொண்டனர். அவனும் அதற்கு ஒப்புக்கொண்டான். அது முதல் இந்த ஊரார் வீட்டுக்கு ஒரு நாள் முறைப்படி

ஆகாரம் அனுப்பி வருகின்றனர். நாளை நான் ஆகாரம் அனுப்ப வேண்டிய முறை. எனக்கு ஒரே மகன் இருக்கிறுன். ஐயோ! அவனை இழந்துவிட்டு நான் எப்படி உயிர் வாழ்வேன்" என்று கூறி அழுதாள்.

இதைக் கேட்ட குந்தி மிகவும் வருந்தி "அம்மா! அழாதே. உனக்கு இருப்பதோ ஒரு பிள்ளை. எனக்கு ஐந்து பிள்ளைகள் இருக்கிறுர்கள். அவர்களில் ஒருவனை உன் மகனுக்குப் பதிலாக அனுப்புகிறேன். பயப்படாதே" என்று கூறித் தேற்றினுள். பின்பு குந்தி இந்தச் சங்கதியை பீமனிடம் சொன்னுள். பீமனும் தான் செல்லுவதாக ஒப்புக்கொண்டு, மறுநாள் ஒரு இரட்டைமாட்டு வண்டியில் சோறு முதலியவற்றை நிரப்பிக்கொண்டு பகாசுரன் வாழும் காட்டை நோக்கிச் சென்றுன். வழியில் ஒரு குளக்கரையில் வண்டி மாடுகளை அவிழ்த்து விட்டு ஆகாரங்களை உருண்டை உருண்டையாக உருட்டி விழுங்கத் தொடங்கினுன்.

தனக்கு வரவேண்டிய உணவு, வெகு நேரமாகியும் வராததால், பகாசுரன் மலையுச்சியில் ஏறிப் பார்த்தான். பார்த்ததும், ஒரு குளக் கரையில் பீமன் ஆகாரங்களைப் புசிப்பதைக் கண்டான். தனக்கு உணவாகவேண்டிய மனிதன், தனது மற்ற ஆகாரங்களைப் புசிப்பதைக் கண்டதும், கோபத்துடன் ஓடிவந்து பீமன் முதுகில் பலமாய்க் குத்தினுன். பீமனே அவனுடைய குத்துகளை லட்சியம் செய்யாமல் ஆகாரம் முழுவதையும் உண்ட பின்பே சண்டைக்குப் புறப்பட்டான்.

பகன் ஒரு மரத்தை வேரோடு பிடுங்கி பீமனை யடிக்க ஓங்கினன். அதைத் தனது இடக்கையால் தடுத்துவிட்டு, பீமன் தன் கதாயுதத்தால் பகனை யடித்தான். இவ்வாறு அவர்கள் இருவரும் வெகு நேரம் சண்டை செய்தனர். இவர்களது சண்டை யில் அம்மலையே அதிர்ந்தது. ஊராரும் பயந்து நடுங்கினர். முடிவில் பீமன் பகாசுரனைக் கொன்று விட்டு ஊர் திரும்பினன். ஊரார் யாவரும் பீமனையும் குந்தியையும் புகழ்ந்தார்கள். அவர்கள் தங்கியிருந்த வீட்டுக் கிழவியோ, தன் மகனையும் ஊரையும் காத்த குந்தியின் காலில் விழுந்து, அவளையும் பீமனையும் வாயார வாழ்த்தினள். இவ்வாறு குந்தி தேவி செய்த உதவியால் அவ்வூரார் பகாசுரனுடைய துன்பம் நீங்கிச் சுகமாய் வாழ்ந்தனர். பிறர் துன்பங்கண்டு உதவ வேண்டும்.

---

## 8. சுவாமி விவேகானந்தர்

வங்காளத்தின் தலைநகரான கல்கத்தாவில் விசுவநாத தத்தர் என்ற பிராமண வக்கீல் ஒருவர் இருந்தார். அவருக்கு நரேந்திர தத்தர் என்ற ஒரு குமாரர் உண்டு. அவர் 1862-ம் ஆண்டில் பிறந்தவர். நரேந்திர நாதர் வெகு சுலபமாய்க் கல்வியில் தேர்ச்சிபெற்றார். இருபது வயதிற்குள் பி. ஏ. பட்டமும் கிடைத்தது. தந்தையைப் போலவே சட்டப் பரீட்சையில் தேர்ச்சி பெற எண்ணினர்.

இந்து வேத சாஸ்திரங்களையும் புராணங்களை யும் ஆவலுடன் படித்து ஆராய்ந்தார். “கடவுள்

எங்கு இருக்கிறார்? அவர் குணங்கள் யாவை? மனிதர் எதற்காகப் பிறக்கிறார்கள்?" என்பவை போன்ற பல சந்தேகங்கள் அவர் மனத்தில் அடிக்கடி தோன்றின. தமது சந்தேகத்தைத் தெளிவித்துக்கொள்ள வழி தேடினார். நரேந்திர நாதர் பலமும் அழகும் வாய்ந்தவர்; மிகவும் இனிமையாகப் பாடுவார்.



அந்தச் சமயத்தில் காளிகட்டத்திலே ராமகிருஷ்ண பரம ஹம்ஸர் என்ற ஒரு மகான் இருந்தார். அவர் காளி தேவியைக் கருத்தில் வைத்து, ஆனந்தம் அடைவார். அநேகப் பிரபுக்களும், ஏழை மக்களும் தினந்தோறும் அவரைக் காணச் செல்வார்கள். ஒரு நாள் நரேந்திர நாதரும் அவரைப் பார்க்கப்போனார். நரேந்திருடைய முகத்தில் சுறுசுறுப்பும் அறிவும் விளங்குவதைக் கண்ட அம் மகான் பரவசமடைந்தார். நரேந்திருடன் சிறிது நேரம் பேசினார். அவரைப் பாடச் சொன்னார். நரேந்திரரும் கடவுள் தோத்திரங்களை, கேட்பவர் மனம் உருகும்படி பாடினார். பரம ஹம்சர் மனமகிழ்ந்

தார். நரேந்திரருக்கோ பரமஹம்ஸரை விட்டுப் பிரிய மனமில்லை.

இதுமுதல் நரேந்திரர் பரமஹம்ஸரிடம் அடிக்கடிச் சென்று, கடைசியில் அவரது சிஷ்யராயினர். அவருடைய மனத்தில் தோன்றிய சந்தேகங்களைப் பரமஹம்ஸர் தெளிவித்தார். அதனல் நரேந்திரரது அறிவு சிறந்து விளங்கியது; 'தாம் இவ்வுலகத்தில் பிறந்தது பொது ஜனங்களுடைய நன்மைக்குப் பாடுபடுவதற்காகவே' என்று அறிந்தார். சில வருஷங்களில் பரமஹம்ஸர் சித்தியடைந்தார். பிறகு அவருடைய ஞாபகார்த்தமாக மடம் ஒன்று அவரது சிஷ்யர்களால் ஸ்தாபிக்கப்பட்டது. இந்து மதத்தின் உண்மைகளை எங்கும் பரவச் செய்வதே அம்மடத்தின் நோக்கம். இந்த மடத்தை ஸ்தாபித்த சிஷ்யர்களில் முக்கியமானவர் நரேந்திரரே.

அவர் உலகத்திற்கு உழைக்கும் பொருட்டு சந்நியாசியாகி விவேகானந்தர் என்ற பெயர் கொண்டார். சில காலம் இமயமலையில் தனிமையான இடத்தில் இருந்து தவம் செய்து, தமது மனத்தை நிலைப்படுத்தி, பல அரிய விஷயங்களை அறிந்து கொண்டார். பிறகு அவர், இந்தியாவின் வடக்கே உள்ள திபெத்து தேசம் சென்று, புத்த மதக் கொள்கைகளைத் தெரிந்து கொண்டார். அப்பால் அவர் இந்தியாவுக்குத் திரும்பி, பல ஜனங்களுக்கும் உபதேசம் செய்தார். இதற்காகவே அவர் இந்தியாவில் பல ஊர்களுக்கும் சென்று, தமது கொள்கைகளைப் பரப்பலானர். விவேகானந்தரது உபதேசங்களை

யும், பிரசங்கங்களையும் கேட்ட பலரும் அவரைப் பின்பற்றி நடக்கலாயினர். நமது சென்னை நகரத்திற்கும் அவர் வந்திருக்கிறார்.

அக்காலத்தில் அமெரிக்காவில், எல்லா மதங்களின் உண்மைகளையும் அறிய ஒரு பெரிய மகாநாடு கூட ஏற்பாடு நடந்தது. அங்குச் சென்று இந்து மத உண்மைகளைப் பரப்பவேண்டுமென்று விவேகானந்தருக்கு ஆவல் உண்டாயிற்று. அதற்காகச் சிலர் பணந் திரட்டி அவரிடம் கொடுத்து, அவரை அனுப்பினர். அப்பணம் அமெரிக்கா சென்றதும் செலவாகிவிட்டது. அதனால் அவர் அங்கு மிகவும் கஷ்டப்பட்டுக் கடைசியில் ஒரு அமெரிக்க வயோதிக மாதால் ஆதரிக்கப் பட்டார். அம்மாதின் முயற்சியால், சிகாகோ நகரில் நடைபெற்ற பெரிய மகாநாட்டில் பேச விவேகானந்தருக்கு அனுமதி கிடைத்தது. காவியுடை தரித்த விவேகானந்தர், இந்துமத உண்மைகளை மிகவும் தெளிவாகவும் விரிவாகவும் ஆங்கிலத்தில் பிரசங்கித்தார். இதைக் கேட்ட பல நாட்டினரும், அவரையும் இந்து மதத்தையும் நன்கு மதித்தனர். அமெரிக்காவில் பல ஊர்களிலும் பிரசங்கிப்பதற்கு அவரை அழைத்தனர். பல இடங்களிலும் பிரசங்கம் செய்துவிட்டு இங்கிலாந்து சென்றார். அங்கும் அரிய பல பிரசங்கங்கள் செய்துவிட்டு இந்தியாவுக்குத் திரும்பினர்.

பிறகு அவர் நமது நாட்டில் பலருக்கும் உபதேசம் செய்தார். அப்போது இந்தியாவில் பெரிய பஞ்சம் ஏற்பட்டது. ஆயிரக்கணக்கான ஜனங்கள்

உணவில்லாமல் வருந்தி உயிர் இழந்தனர். இதைக் கண்ட விவேகானந்தர், பல தனவந்தரிடமிருந்து பொருள் திரட்டி ஜனங்களைக் காத்தார். இந்துமத உண்மைகளைப் பரப்புவதற்காகப் பல இடங்களிலும் தமது குருநாதர் பெயரால் மடங்களும் வித்யாலயங்களும் ஸ்தாபித்தார். நமது சென்னை நகரில் மைலாப்பூரில் உள்ள ராமகிருஷ்ண வித்யாலயம் நன்கு நடைபெற்று வருகிறது. இம் மடங்களைச் சேர்ந்த வித்யாலயங்களில் மதக் கல்வி, பொதுக் கல்வி, தொழிற் கல்வி முதலியவை கற்பிக்கப்படுகின்றன. இதில் பயிலும் மாணவர்கள் கல்யாணம் செய்து கொள்ளாத பிரமச்சாரிகளே. வெள்ளம், பஞ்சம் முதலியவை ஏற்படும் காலங்களில் இம் மடத்தார் கஷ்டப்படும் ஜனங்களுக்கு மிகவும் உதவி செய்து வருகிறார்கள்.

விவேகானந்தர் பின் இரண்டாம் முறை இங்கிலாந்துக்கும் அமெரிக்காவுக்கும் சென்று திரும்பினார். அவருடைய தேக சௌக்கியம் குறைவுற்றது. முடிவில் 1902-ம் வருஷம் ஜூலை மாதத்தில் ஒரு நாள் திடீரென்று சமாதி அடைந்தார். அப்போது அவருக்கு நாற்பது வயது. இதற்குள் அவர் உலகத்தாருக்குச் செய்துள்ள உதவியோ அளவில்லாதது. இந்துமத உண்மைகளை உலகெங்கும் பரப்பி, நம் நாட்டுக்கு அழியாப் புகழ் தேடியளித்த அவரது பெயரும் புகழும் என்றென்றும் சிறந்து விளங்குமென்பதில் சிறிதும் ஐயமில்லை.

---

## 9. எலிகளும் குழந்தைகளும்—I

(பாட்டு)

(கஜமுக நீரே என்ற மெட்டு)

உயர்வுந் தாழ்வுமிவ் வுலக வாழ்விலே
அயர்வி லாமலே அடைதல் வேண்டுமே. 1
என்ன தீமைதான் எய்தி னாலுமே
சொன்ன வண்ணமே துணிதல் நன்மையே. 2
முன்பு சொன்ன சொல் முடிக்கி லாமையாற்
பின்பு கேவலம் பெற்று ளோர்பலர். 3
கொங்கு நாட்டிலோர் குடியி ருப்பிலே
தங்கு மக்களே தளர்வி லாதகல் 4
உழவின் மிகுதியால் உயர்வு மிக்கவர்
கிழவர் பாலரும் கேடிலாமலே 5
எண்ணிலா தவர் இருந்து வாழ்ந்தனர்;
திண்ண மாகவோர் தீமை வந்ததே. 6
களத்த டித்த பின் கண்ட தானியம்
வளத்தை வளர்க்கவே வாரி வந்தவர் 7
வைத்த இடங்களில் வயிறு வளர்க்கவே
இத்த னையென எண்ணிலா வெலி 8
கூட்டம் கூட்டமாய்க் கூடி வாழவே,
ஓட்ட வழியினை உணர்கி லாமலே 9
மயங்கி, எலியெல்லாம் வாழ்வி னோங்கியே
ஜயம் கிடைத்ததால் தழைய விட்டனர். 10
எலியினால் வரும் இன்னல் மிக்கதும்
கலியினால் வரும் கவலை யென்றனர். 11

மிக்க எலிகளால் விளைந்த தீமைகள்
ஒக்க உரைத்திட உலகம் போதுமோ? 12
இருக்கும் வீட்டினை எலிக்குப் பயந்துமே
எரிக்கும் தீவினை எய்த லாயதே. 13
ஓடித் திரிவதும் ஊரைக் கெடுப்பதும்
வாடித் திரியெலி வழக்க மாயதே. 14
புதிய தோர்பிணி புகுந்து எலிகளை
விதியி னாலென விலக்க வந்ததே. 15



செத்த எலிகளே சிறிதும் பெரிதுமாய்ச்
சொத்து சொத்தென சூழ விழுந்தன. 16
எலி விழுந்ததால் இறந்து போவதைக்
கிலி பிடித்துமே கேட்கலாயினர். 17
வீட்டை விட்டுமே வியாதி தொடரவே
காட்டை யடைந்தனர் கணக்கி லாதவர். 18

நாட்கள் சென்றபின் நாடுபுக வவர்
ஆட்கள் கொண்டுமே அலைய லாயினர். 19
இன்ன வண்ணமாய் இரண்டு வருடங்கள்
சின்ன எலிகளாற் சின்னப் பட்டனர். 20
பீடை பிடித்தவிப் பெரிய பகையினை
ஓட வடிக்கவே உழைக்கப் புகுந்தனர். 21
"யாவராயினும் எலியின் தொகுதியை
ஏவ வல்ல ராய் எங்கள் ஊரினை. 22
விலகிப் போகவே விரும்பிச் செய்திடில்
இலகு பொருள்பல ஈவம்" என்றனர். 23
குழலை யூதியே கொடுத்த பிச்சையை
வழியில் வாங்குவோன் வந்து நின்றனன். 24
"குழலை யூதிநான் கொடிய எலிகளை
முழுதும் அழிக்கவே முடியும்" என்றனன். 25
"செய்ய லாவன செய்க செய்தபின்
ஐய! எங்களால் ஆன செல்வங்கள் 26
தருவம்" என்னவே சாற்ற அங்கவன்
உருவக் குழலினை ஊதி நடந்தனன். 27
பெரிதும் சிறிதுமாம் பேதை எலியெல்லாம்
வரிசையாய் அவன் வழியிற் சென்றன. 28
நடந்து சென்றவன் நதியில் இறங்கிடத்
தொடர்ந்து சென்றவை துணிந்து வீழ்ந்தன. 29

---

## 10. எலிகளும் குழந்தைகளும்—II

எண்ணில்லாத பல் எலிகள் இவ்விதம்
கண்ணில்லாமலே கழிந்த செய்கையைக் 30

கண்ட அனைவரும் களிப்பு மிஞ்சினர்
பண்டு போலவன் பார்க்க வந்துமே, 31
"ஐயா! எனக்கு நீர் அளிக்கலாம் பொருள்
பைய வந்திடப் பாரும்" என்றனன். 32



"எலிகள் இறந்தன, இனியென் செய்குவான்
ஒலிசெய் குழலினால் ஒருவன்" என்னவே. 33

எண்ணியோர் சல்லி ஈந்து, 'போ' வென
நண்ணி யனைவரும் நவின்று நின்றனர். 34
"கூலி கொடுக்கவே குணமில்லாத நீர்
கேலி செய்கிறீர் கெடுதி யடைகுவீர்" 35
என்று கூறியே இனிய குழலினை
அன்று மறுமுறை அங்கு ஊதினன். 36
மாடு கன்றொடு மனையின் மகிழ்வுற
ஆடு கின்றநல் அழகி ளஞ்சிறார் 37
நடக்கும் குழந்தைகள் நான்முன் நீயென
அடக்கும் வகையின்றி அவன்பின் சென்ற
பெற்ற அனைவரும் பித்தர் போலவே [னர். 38
இற்ற மக்களுக் குருகி நின்றனர். 39
அந்தக் கூட்டத்தை அழைத்துச் சென்றவன்
வந்த வழியிலே வரவும் இல்லையே. 40
சென்ற வழியினைத் தெரிந்து கூறவும்
அன்றவ் வூரினில் ஆரு மில்லையே. 41
வேலை யொன்றினை விரும்பி யேற்றபின்
கூலி கொடுத்திடக் கூச லாகுமோ? 42
கூலி கொடுத்திடாக் குறையினல் தங்கள்
பாலியர்களைப் பறி கொடுத்தனர். 43
முன்னம் உரைத்த சொல் முறைமை யறிந்துமே
பின்னம் செய்திடிற் பிழைகள் வந்திடா. 44
இன்ன கதையினல் 'இன்ப துன்பங்கள்
சொன்ன சொல்லினல் சூழும்' என்னவே. 45
தெரிந்து கொண்டுளோம் சிறிய செய்கையும்
புரிந்து சொன்னசொல் போற்றிடல் நன்றே. 46

---

## 11. தேனீ வளர்த்தல்

தேனீ என்ற சிறிய உயிர்ப் பிராணி மனிதருக்கு மிகவும் பயன்படுவதாகும். மலர்களில் உள்ள சுவைமிக்க சாற்றையெடுத்துக் கூட்டிலே சேர்த்து இனிமையுள்ள தேன் என்ற பொருளாகச் செய்யும் தேனீ ஒரு சிறிய பூச்சியே. இறகுகளின் துணையால் நெடுந்தூரம் பறந்து சென்று மலர்களில் மொய்க்கும் இப்பூச்சிகளின் கூட்டத்தை நாம் நாள்தோறும் பார்க்கிறோம்.

தேனீ, தான் தேடிச் சேர்க்கும் தேனை மிகவும் கவலையோடு காப்பாற்ற முயல்கிறது. தனக்கு உணவுப் பொருளாக உதவும் பொருட்டே சேர்க்கும் தேனை மனிதன் கொள்ளை கொள்ள வரும்போது



அது மிக்க சினத்தோடு போராடுகிறது. புகையும் நெருப்பும் கொண்டு மனிதன் நெருங்கும்போது சிறிய உயிராகிய தேனீ என்ன செய்யும்? தன் உயிரையும் பொருளையும் இழந்து அழிகிறது.

காடுகளிலும் மலைகளிலும் நாடுகளிலும் மனிதர் நெருங்குவதற்கு அரிய இடங்களிலே கூடு அமைத்து வாழும் தேனீக்களை ஆயிரக் கணக்கிலே கொன்று தேன் எடுக்கிறோம். மெழுகினால் அமைந்த தேன் அடைகளைக் கசக்கிப் பிழிந்து தேன் எடுக்கிறோம்.

இப்படி எடுத்த தேன், பூச்சி புழுக்களும் அழுக்கும் மெழுகும் நிரம்பி ஈ மொய்ப்பதாய் இருக்கும். மலைத் தேன், கொம்புத்தேன் என்று கூறி விற்கவரும் சிலர் இப்படி யெடுத்த தேனையே கொண்டு வருகின்றனர்.

உணவுப் பொருள்களிற் சேர்க்கவும் மருந்துகளிற் கலக்கவும் உதவத்தக்க தேனை இயன்றளவு சுத்தமாக எடுக்க முயல்வது நல்லது. பழைய வழிகளைப் பின் பற்றினுல் சுத்தமான தேன் கிடைப்பது அரிது. மலைக் குறவர்கள் தேன் எடுப்பதற்கு உரியவர்கள் என்று எண்ணுவது தவருகும். தேனீக்களை நாமே கூடுகட்டி வளர்த்து முறைப்படி தேனை எடுத்து நல்ல ஊதியம் பெறலாம்.

மலைத்தேனீ, நாட்டுத்தேனீ, சிறுதேனீ, கருந்தேனீ என நான்கு வகைத் தேனீக்கள் உண்டு. இவற்றுள் நாட்டுத் தேனீயே நாம் எளிதிலே பிடித்து வளர்க்கத் தக்கதாகும். இவ்வகைத் தேனீ தனது கூட்டுக்குள் தேனடையையும் குஞ்சறையையும் வேறு வேருய் அமைக்கும். இதன் கூடு நாம் நெருங்கத்தக்க உயரத்திலேயே இருக்கும். மரத்தினுற் கூடுகள் அமைத்து வளர்ப்பதற்கு இவ்வகையே சிறந்தது. பட்டபாட்டுக்குத் தக்க பலன் கிடைக்கும்.

மேற்கூரையுள்ள சிறிய அறைபோல மரத்திலே கூடு அமைத்து அடைகளுக்காகப் பல சட்டங்கள் வைக்கவேண்டும். தேனடைகளும் பூச்சியறைகளும் தனித்தனி அமையத்தக்க இடங்கள் அக்

கூட்டினுள் இருக்கவேண்டும். காட்டு மரங்களிலே கூடுகட்டி வாழும் தேனீக்களை நெருங்கிச் சிறிது புகையிட்டு அரசியைப் பிடித்து நாம் செய்த மரக் கூட்டுள் விட்டுக் காக்க வேண்டும். அரசியுள்ள இடத்துக்கு அதற்குக் காவலாகவுள்ள தேனீ யினங்கள் எல்லாம் வந்து சேரும். அரசியோடு வரும் ஆண் ஈக்களும் தொழிலாள ஈக்களும் வலையால் எளிதிற் பிடிக்கப்படலாம்.

அரசியைப் பிடித்துக் கூட்டில் அடைப்பது எளிதன்று. தேள் கொட்டுவது போல தேனீ கொட்டுவது உண்டு. மிகவும் கடுக்குமாயினும் எடுத்த முயற்




சியை விடலாகாது. புகை யிடுவதால் கடிபடுவது குறைவாகலாம். அரசியோடு தேனடைகளும் பூச்சியறைகளும் எடுத்து மரக் கூட்டினுள் வைத்துவிட்டால் அக்கூடே தேனீக்களுக்கு வாழ்விடமாய் விடும். பிறகு அக்கூட்டிலே தேன் திரட்டுவது எளிதாகும். அரசியை அறிவது முதலில் எளிய செயலன்று. சிறிது பழகிய பிறகு அதன் உருவத்தாலும் அதற்கு

அமைந்துள்ள காவலாலும் அறிந்து கொள்ளலாம்.

மற்றொரு எளிய வழியாலும் தேனீக்களைப் பிடித்துவரலாம். துளைத்த பனைமரத் துண்டில் இரு புறமும் வாயில் இல்லாமற் பலகையால் அடைத்து ஒரு புறத்திலே சிறு துளைகள் விட்டு உட்புறம் மெழுகு தடவிக் காடுகளில் வைத்தால் தேனீக்கள் தாமாகவே அதில் வந்து குடியேறும். தேனடை வைப்பதை அறிந்த பிறகு அதை யெடுத்துக் கொண்டுபோய் வைத்துக் கொள்ளலாம். சிறிய பானைகளில் மெழுகு தடவி வைத்துத் தேனீக்களைப் பிடிப்பதும் உண்டு. இப்படி வந்த தேனீக்களின் கூட்டத்தை நமது கூட்டிலே நாம் நன்கு போற்றி வளர்க்க வேண்டும்.

தேனீக்கள் தேன் திரட்டிவைத்து ஓயாது உழைப்பது அரசியின் நன்மைக்காகவே யென்று நாம் அறியலாம். ஒரு கூட்டுக்கு ஒரு அரசியே உண்டு. வேறு சில பெண் ஈக்கள் இருப்பினும் அவையெல்லாம் சிறைகளில் அடைபட்டிருக்கும். எப்பொழுதேனும் அரசி வெளியேறித் திரும்பவும் வராது என்று கண்டோமானல் உடனே வேறொரு பெண் ஈயை அரசியின் நிலையில் வைக்க வேண்டும். அரசி இல்லாத கூடு பாழாய்விடும். நாள்தோறும் பல நூற்றுக்கணக்கான முட்டைகளை யிடுவதும் நன்றாய்த் தின்று கொழுப்பதுமே அரசிக்கு அமைந்த வேலையாகும். ஆண் ஈக்கள் பெருஞ் சோம் பேறிகளாகும். தொழிலாள ஈக்களே இப் பெரிய குடும்பத்துக்காக உழைக்கின்றன.

இப்படி அமைந்த தேனீ வீடுகள், மாதம் இரு முறை தேன் தரும். அரசியின் வாழ்நாள் மூன்று வருடமாகும். அக்காலமெல்லாம் தேன் அகப்படும்.



மூப்பு மிக்க அரசியைக் கொன்று தேனீக்களே புதிய அரசியை அமைக்கும் காட்சியையும் பார்க்கலாம். இங்ஙனம் மரக் கூடுகளிலிருந்து தேன் அடைகளை எடுத்துத் தேனெடுக்கும் பொறியில் வைத்துச் சுற்றித் தேன் எடுக்க வேண்டும். அடைகளை எடுக்க முன் அறைகள் மூடுண்டிருப்பதைப் பார்த்துக் கொள்ள வேண்டும்.

மலர்களிலே தேன் தேடும் இப்பெரிய குடும்பம் மரநிழல்களிலே நன்கு வளரும். காலை வெயில்படும்படி கூடுகளை வைத்தால் இவை சுறுசுறுப்பாய்த் தேன் தேடப் புறப்படும். இவை திரட்டிய தேனை நாம் எடுக்கும்போது புகையிட்டுத் தொழிலாள ஈக்களை ஒட்டிவிடுவது நல்லது. இவ்வளவு பாடுபட்டுத் தேடிய தேனை நமக்குக் கொடுத்த இவை மடியா வண்ணம் பார்ப்பது நமது கடமையாகும். ஒரு கூட்டிலேயே பல முறை தேன் எடுக்க எளிய வழி உண்டு என்றால், ஆயிரக்கணக்கிலே இச்சிறிய உயிர்களைக் கொன்று நாம் ஏன் பாவத்தைத் தேடவேண்டும்?

தேனை மண்பாண்டங்களிலும் கண்ணாடிப் பாத்திரங்களிலும் வைப்பது நல்லது. ஈரம் பட்டால்

புளித்து நுரை தோன்றிக் கெட்டுப்போகும். ஆகவே நன்றாய் மூடி வைக்கவேண்டும். தாமரைப்பூ, வேப்பம்பூ என்ற இப் பூக்களின் தேன் மருந்துக்கு மிகவும் சிறந்தனவாகும். எவ்வகைப் பூவிலும், தேனீ தேன் தேடிவரும் இயல்புள்ளது. தேன் கூடுகளால் வரும் வருமானம் அதிகம் இல்லையே என்று எண்ணக் கூடாது. ஒரு கூட்டுக்கு வருஷத்திலே முப்பது ரூபாய் வருவாய் வரும். பத்துக் கூடுவைத்து வளர்க்கும் வேளாளன் தன் வேளாண்மைக்கு இதுவும் உதவியாய் இருக்கக் காண்பான். கிராமங்களில் செல்வம் பெருக இத்தொழில் ஒரு சிறந்த வழியாகும் என்பதைத் திருவாங்கூர் சமஸ்தானத்தில் உள்ள மார்த்தாண்டம் என்ற ஊரிலே செய்து காட்டுகிறார்கள்.

---

## 12. பாஷாபிமானம்

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் மிக்க பல முற்றிருந்த ஜெர்மானியர், தமது தேசத்துக்கருகிலிருந்த ஆல்ஸாஸ் லோரைன் என்னும் சிறு மாகாணத்தைக் கைப்பற்றினர். ஜெர்மன் சக்கரவர்த்தியான கெய்ஸர் அந்நாட்டினரைக் கடுமையாய் நடத்த ஆரம்பித்தார். அவர்கள் தங்கள் தாய்மொழியான லோரைன் பாஷையில் ஒருவருக்கொருவர் பேசிக்கொள்ளவும் எழுதவும் கூடாதெனக் கண்டிப்பாய்க் கட்டளையிட்டார். பள்ளிக்கூடங்களிலும் அப்பாஷையைக் கற்பிக்கக் கூடாதென்றும் ஜெர்மன் பாஷையே கற்பிக்கப்பட

வேண்டு மென்றும் ஜெர்மன் பாஷையிலேயே அந்நாட்டினர் யாவரும் பேசவும் எழுதவும் வேண்டு மென்றும் உத்தரவிட்டார். இவ்வுத்தரவை மீறியவர் கடுமையாய்த் தண்டிக்கப்பட்டனர்.

இவ்வுத்தரவைக் கேட்ட லோரைன் நாட்டினர் யாவரும் 'இடியோசை கேட்ட நாகம்' போல் மனங் கலங்கினர். ஆயினும் என் செய்வது? மனக் கொதிப் புடன் தமது தாய்ப் பாஷையை விட்டு, முப்பது வருடகாலம் ஜெர்மன் பாஷையையே உபயோகித்து வந்தனர். அந்நாட்டிலிருந்த பள்ளிக்கூடங்களிலெல் லாம் ராஜாங்க பாஷையான ஜெர்மன் பாஷையே கற்பிக்கப் பட்டு வந்தது. ஆனால் ஜெர்மானியருக்குத் தெரியாமலே பலர் தமது தாய்ப் பாஷையை மறக் காமல், இரவில் வெகு இரகசியமாகப் பேசி வந்த னர். தமது தாய்மொழியை அறவே ஒழிக்க யார் தான் இசைவர்?

ஒரு சமயம் ஜெர்மானியச் சக்கரவர்த்தினியான கெய்ஸரினி லோரைன் நாட்டிலுள்ள ஒரு பெண் பாடசாலைக்கு விஜயம் செய்தார். அப் பள்ளிக் கூடத்திலும் ஜெர்மன் பாஷை மட்டுமே கற்பிக்கப் பட்டு வந்தது. கெய்ஸரினியைக் கண்டதும் உபாத்தி னியும் சிறுமிகளும் ஜெர்மன் பாஷையில் வந்தனங் கூறினர். கெய்ஸரினியும் சிறுமிகள் அப்பாஷை யில் அடைந்துள்ள தேர்ச்சியைப் பரீக்ஷித்தார். அவரது கேள்விகளுக்கெல்லாம் தவறாது விடை யளித்த ஓர் அழகிய சிறுமியைக் கண்டு மனங் களித்து, அச் சிறுமியை நோக்கி, "குழந்தாய்!

உனது அறிவையும் குணத்தையும் மெச்சினேன். உனக்கு வேண்டியதைக் கேள் தருகிறேன்" என்றார்.

அது கேட்ட சிறுமி சிறிது தயங்கி, "தாயே! எனக்கு வேண்டியது ஒன்றுமில்லை" என்றாள். கெய்ஸரினி, பெண்ணே! உன்போன்ற சிறுமிக்கு வேண்டாதது இருக்குமா? தைரியமாய்க் கேள்" என்றார். சிறுமி தைரியமடைந்து, "தாயே! எனக்கு வேண்டியது ஒன்று இருக்கிறது. ஆனால் அதனைத் தாங்கள் தர முடியுமா என்று சந்தேகமா யிருக்கிறது. அதனால்தான் நான் கேட்கவில்லை" என்றாள். கெய்ஸரினியோ சிறிது கோபத்துடன், தைரியமுள்ள சிறுமியே! நீ யாருடன் பேசுகிறாய் என்று அறிவாயா? ஜெர்மனி தேசத்துக் கெய்ஸரினியான என்னால் அளிக்க முடியாததும் இவ்வுலகில் உண்டோ? நீ எது கேட்பினும் தவறாது கொடுக்கிறேன், கேள்" என்றாள்.

அச் சிறுமியோ உடனே முழந்தாழிட்டுக் கண்ணீர் விட்டு, தாயே! எந்தப் பாஷையை எனது தாய் தந்தையர் இரவில் பயந்து இரகசியமாகப் பேசுகிறார்களோ, அந்தப் பாஷை இந்நாட்டுக் குடிகள் யாவரும் தாராளமாய்ப் பேசும்படி அனுமதிக்க வேண்டும். அந்த எங்கள் தாய் பாஷையிலேயே பள்ளிக்கூடங்களிலும் பாடங்கள் நடக்குமாறு உத்தரவளிக்க வேண்டும். இதுதான் எனது வேண்டுகோள்" என்று கூறினாள்.

கெய்ஸரினி இதைக் கேட்டதும் பதில் கூற இயலாது திகைத்தார். தமது கணவரான கெய்ஸரது கண்டிப்பான உத்தரவை மாற்ற அவருக்கு உரிமை சிறிதுமில்லை. ஆகையால் உடனே அத்தீரச் சிறுமியைத் "தமது வண்டியிலேயே அழைத்துச் சென்று, தம் கணவரிடம் நடந்த விஷயங்களைக்கூறி, தமது வாக்குப் பொய்யாகாமற் காக்கும்படி அவரை வேண்டினர். கெய்ஸரும், "மனைவி அளித்த வாக்கைக் காப்பாற்றாவிடில் தமக்கும் கேவலம் ஏற்படும்" என்பதை யறிந்து, அவ்வாறே செய்யச் சம்மதித்துக் கட்டளைகள் பிறப்பித்தார்.

அன்று முதல் லோரைன் மாகாணக் குடிகள் யாவரும், யாதொரு பயமுமின்றித் தங்கள் தாய்ப் பாஷையைத் தாராளமாய்ப் பேசினர். பள்ளிக் கூடங்களிலும் லோரைன் பாஷையிலே பாடங்கள் கற்பிக்கப்பட்டன. ஒரு சிறுமியின் பாஷாபிமானத் தால் அத்தேசத்துக்கே எவ்வளவு நன்மை ஏற்பட்டது பாருங்கள்! என்னே அச்சிறுமியின் பாஷாபிமானம்! ஆகவே அவளைப்போலவே, நாமும் நமது தாய் மொழியான தமிழ்மொழியைப் போற்றிப் பேணுதல் வேண்டும்.

---

## 13. ஈயும் நோயும்

பிள்ளைகளே! நீங்கள் எல்லோரும் ஈயைப் பார்த்திருப்பீர்கள். அது எவ்வளவு சிறியதாய் இருக்கிறது. அது எங்கே பிறக்கிறது; என்னென்ன

காரியங்கள் செய்கிறது என்பதைப் பற்றி இந்தப் பாடத்தில் படிக்கலாம்.

ஈ பூச்சிகளின் இனத்தைச் சேர்ந்தது. அதன் உருவத்தைப் பாருங்கள். மிகச் சிறியதுதான். தலையின் இரு புறங்களிலும் இரண்டு கண்கள் உண்டு. ஈயின் கண்கள் சல்லடைபோல் பல சிறு துவாரங்கள் உள்ளதாய் இருக்கும். அதனுல் அவற்றைச் சல்லடைக் கண்கள் என்று சொல்வது உண்டு. தலையின் பாகத்தில் இரண்டு மெல்லிய கொம்புகள் உண்டு. இவைகள் உணர்ச்சிக் கொம்புகள் அல்லது ஸ்பரிசக் கொம்புகள் என்று சொல்லப்படும். இவைகளின் உதவியால் எதிரில் உள்ள பொருள் இன்னதென்று ஈ அறிந்து கொள்ளும். ஈயின் உடல் சிறு வளையங்களைச் சேர்த்து அடுக்கினுற்போல் இருக்கும். ஈயின் உடலில் பக்கத்திற்கு மூன்று கால்களாக, இரண்டு பக்கத்திலும் ஆறு கால்கள் உண்டு. உடலின் மேற்புறத்தில் இரண்டு சிறிய சிறகுகள் உண்டு. ஈயின் கால்கள் முழுவதும் சிறு நுண்ணிய மயிர்கள் அடர்ந்திருக்கும்.





பக்ஷிகளைப் போலவே ஈயும் முட்டையிடும். தாய் ஈ தன் முட்டைகளை அழுகிய பதார்த்தங்கள், சாணம், மலம் முதலியவற்றின் மேல் தடவைக்கு 100 முதல் 150 வரை அடுக்கடுக்காக இடும். வெண்மையாகவும் பளபளப்பாகவும் உள்ள இம்முட்டைகள் சூரிய வெப்பத்தினால், 24 மணி நேரத்தில் வெடிக்கும். குளிர் காலத்தில் அவை வெடிப்பதற்கு 2 அல்லது 3 நாட்கள் ஆகும். முட்டை வெடித்த பின், அதிலிருந்து சிறு புழு வெளியே வரும். அப்புழு சிறியதாயும் நீளமாயும் இருக்கும். அதன் முன் பக்கம் சிறுத்தும், பின் பக்கம் பருத்தும் இருக்கும். இப்புழு, தான் பிறந்த இடத்தில் உள்ள அழுகிய பதார்த்தங்களையே தின்று வளர்ந்து, 4 அல்லது 5 நாட்களில் பெரியதாகிவிடும். உடனே அது தன் உடலை மறைத்துக்கொள்ள ஒரு கூடு அமைத்துக்கொண்டு, அதில் ஆகாரம் கூடத் தின்னுமல் தன்னை மறந்து உறங்கிக் கிடக்கும். அப்பொழுது அதற்குக் கூட்டுப் புழு என்று பெயர். கூட்டுக்குள்ளேயே சிறகுகள், கால்கள் முதலியவை வளர்ந்துவிடும். சில நாட்களில் இக்கூடும் வெடித்து, பெரிய ஈ வெளியேறும். பெரிய ஈ 4 முதல் 6 வாரம் வரை உயிரோடு வாழும்.

இவ்வளவு சிறிய அற்ப ஆயுளுள்ள பிராணியான ஈ, மனிதனுக்குப் பலவிதத்திலும் கெடுதியே செய்கிறது. ஆகையால் அது நமக்கு ஒரு கொடிய விரோதி. கக்கூஸ்களில் உள்ள மலத்திலும், அழுகிய குப்பை கூளங்களிலும் அது இருப்பதாலும் உட்காருவதாலும் அதன் கால்களில் அசுத்தங்களும்

பல வியாதிகளை உண்டாக்கும் கிருமிகளும் ஒட்டிக் கொள்ளுகின்றன. வீட்டின் உள்ளேயும் வெளியே யும் தாராளமாய்ப் போய்வருவதால், மலத்திருக்கும் ஈ கலத்திருக்கும் என்றபடி, மலத்தின் மேல் உட்காரும் ஈ நாம் உண்ணும் ஆகாரத்தின் மேலும் உட்காரு கிறது.

இவ்வாறு உட்காரும் ஈ நமது ஆகாரத்தில் பல அசுத்தங்களையும் வியாதிக் கிருமிகளையும் விட்டுச் செல்லுகிறது. ஆகையால் இந்த ஆகாரத்தை உண் ணும் ஜனங்களுக்குக் காலரா என்னும் வாந்திபேதி, வயிற்றுக் கடுப்பு, வயிற்றுப் போக்கு, டைபாய்டு என்னும் விஷஜுரம், க்ஷயரோகம் முதலிய பல வியாதிகள் உண் டாகின்றன. வருஷந்தோறும் அநேக ஆயிரக் கணக்கான ஜனங்கள் இவ்வியாதிகளால் இறந்து போகிறார்கள். ஆகையால் மலத்திலே பிறந்து, மலத் திலே வளர்ந்து, மலத்தையே கொண்டு சென்று மனிதர்களின் உயிரை மாய்க்கும் மகா கொடிய விரோதியான ஈயைப் பலவிதத்திலும் ஒழிக்க முயல வேண்டும்.

ஈக்களை ஒழிப்பதற்கு மூன்று வழிகள் உண்டு.

1. ஈக்கள் உண்டாவதற்கு ஏற்ற வசதிகள் இல்லாமல் செய்வது.

2. ஈக்களையே நாசம் செய்வது.

3. ஈக்கள் நமது ஆகாரத்தை அசுத்தப் படுத் தாமல் காப்பது.

1. இவைகளில் முதல் வழியே மிகவும் சிறந் தது. ஏனென்றால், ஈக்கள் உண்டாகாமல் செய்து

விட்டால் அவைகளின் தொந்தரவும் இராது. அவைகளைக் கொல்லவேண்டியும் வராது. இதற்கு வீட்டையும் வீட்டின் சுற்றுப்புறங்களையும் சுத்தமாக வைத்திருக்கவேண்டும். வீட்டில் அப்போதைக்கப்போது சேரும் குப்பை கூளங்களை வெகு தூரத்தில் கொண்டுபோய்க் கொட்டவேண்டும். வீட்டுக் கக்கூஸ்களில் மலம் அதிகமாய்ச் சேராதபடி அடிக்கடி சுத்தம் செய்யவேண்டும். இவ்வாறு செய்தால் ஈக்கள் உண்டாகாமலே போய்விடும்.

2. ஈக்களால் ஏற்படும் கேடுகளை அறியாத சிலர் அவைகளைக் கொல்லக்கூடாது என்று சொல்லுவார்கள். ஆனால் அவைகளின் செய்கைகளை அறிந்தவர்கள் இவ்வாறு சொல்லமாட்டார்கள். காகிதங்களில் வெல்லம் கலந்த பிசினைத் (கோந்து) தடவி வைத்தால், ஈக்கள் அதில் அகப்பட்டுச் சிக்கிரம் இறந்துபோம்.

3. ஆகாரங்கள், பானங்கள் முதலியவற்றை எப்போதும் மூடியே வைக்கவேண்டும். இவ்வாறு வைத்தால், ஈக்கள் தமது கால்களில் கொண்டுவரும் அசுத்தமும் கிருமிகளும் நமது ஆகாரத்தில் கலவா. தவிரவும் சிறு குழந்தைகளின் மேலும் ஈ மொய்க்காமல் கவனித்துக் கொள்ளவேண்டும். ஏனெனில், அவைகள் குழந்தைகளின் உதட்டிலும், கை கால்களிலும், அசுத்தங்களையும், கிருமிகளையும் விட்டுச் செல்லும். அதனால் குழந்தைகளுக்குக்கேடு உண்டாகும். திறந்து வைக்கப்பட்ட ஆகாரத்தை ஒருபோதும் உண்ணக் கூடாது.

ஈ ஒரு சிறிய பிராணியானாலும் அது நமது கொடிய விரோதி. ஆகையால் நாம் அதைப் பல விதத்திலும் ஒழிக்க முயற்சி செய்ய வேண்டும்.

ஈ இல்லையேல் நோயில்லையே.

---

## 14. உண்மையின் பெருமை

உண்மை யுரைப்பதால் என்றும் நன்மையே விளையும்; பொய் யுரைப்பதால் தீமையே விளையும். உண்மை என்பது, நாம் நினைப்பது, கேட்பது, பார்ப்பது முதலியவற்றை உள்ளவாறே உரைப்பதாம். உண்மை பேசுவதால் முதலில் சிறு துன்பங்கள் ஏற்பட்டபோதிலும் முடிவில் அது இன்பமே அளிக்கும். ஆதலால் உண்மை பேசுவோர் நற்புகழும் நற்பதவியும் அடைவர்.

மதுரைமா நகரில் கோபாலன் என்ற வாலிபன் இருந்தான். அவன் கெட்டவர்களுடைய சகவாசத்தில் சேர்ந்து, காதல், களவாடல், கள்ளுண்டல், பொய்மொழிதல், ஈதல் மறுத்தல் முதலிய பல தீத்தொழில்கள் புரிந்து வந்தான். அவனது தாய் எவ்வளவு கூறியும் அவன் இத்தொழில்களை விடவில்லை. ஒரு சமயம் அவன் தாய் இறக்கும் தருவாயிலிருந்தாள். கோபாலன் அவளருகில் நின்று, அழுதுகொண்டிருந்தான். அப்போது தாய் மகனை நோக்கி, "மகனே! நான் எத்தனையோ கூறியும் நீ உன் தீத்தொழில்களை விட்டாயில்லை. இப்பொழுது அவைகளில் ஒன்றையாவது விட்டொழிப்பதாகச்

சத்தியம் செய்துகொடுத்தாயாகில் நான் மனச் சாந்தியுடன் உயிர் துறப்பேன். எனது கடைசிக் கோரிக்கையையாவது நிறைவேற்றுவாயா?" என்று கனிந்து கேட்டாள்.

கோபாலன் யோசித்தான். "நம் தாயின் கடைசி வேண்டுகோளின்படி எதை விட்டுவிடலாம்? ஐயோ! எல்லாம் எனக்கு எப்போதும் இன்றியமையாதனவாய் விட்டனவே. ஆனல், பொய்சொல்வதை விட்டுவிடலாம். ஆம்! அதனல், ஒன்றும் நஷ்டமில்லை" என்று எண்ணித் தாயை நோக்கி, "அம்மா! நான் இன்று முதல் பொய் சொல்வதை விட்டுவிடுகிறேன். இது சத்தியம்" என்ருன். அதுகேட்ட அவன் தாய் சந்தோஷத்துடன் இறந்தாள். ஒரு மாதம் கழிந்தது.

ஒரு இருண்ட இரவில் கோபாலன் அரசன் அரண்மனையில் களவாடச் சென்ருன். அவ்வூர் அரசனை பாண்டியன் நீதி நெறி தவருது அரசாள்பவன். தன்னுயிர்போல் மன்னுயிர் காப்பவன். இருண்ட இரவுகளில் மாறுவேடம் பூண்டு, நகர் சுற்றிவருவான். அவ்வாறு அன்றிரவில் வரும் வழியில் கோபாலனைக் கண்டான். "அடே! நீ யார்? உன் பெயர் யாது? இந் நள்ளிரவில் எங்குச் செல்லுகிருய்?" என்று கேட்டான். இதைக்கேட்ட கோபாலன் தாயிடம் கூறிய சத்திய வாக்குப்படி, "ஐயா! என் பெயர் கோபாலன்; நான் தெற்கு வெளி வீதியில் வசிப்பவன். இப்போது அரசன் அரண்மனையில் திருடப்போகிறேன்" என உண்மை கூறினன்.

அஞ்சாது உண்மை கூறுவதைக் கேட்ட பாண்டியன், அவனை முற்றிலும் பரிசோதிக்க எண்ணி

னன். "தம்பீ! அப்படியானால் சரி. நானும் அதே தொழிலாளிதான். ஆகையால் நானும் உனக்குத் துணையாக வருகிறேன். திருடும் பொருளில் எனக்கும் பாதி கொடுக்கிறாயா?" என்று கேட்டான். கோபாலனும் ஒத்துக்கொண்டான். இருவரும் அரண்மனைப் பொக்கிஷசாலையை அடைந்தனர். கோபாலன் அரசனைக் காவலாக நிறுத்திவிட்டு, தான் மட்டும் உள்ளே சென்று திரும்பி வந்தான். வந்ததும், "நண்பா! அரசனது பொருள்களில் சிறந்தவை ஒன்றுமில்லை. மூன்று இரத்தினங்களே மிகவும் சிறந்தவை. அவைகளில் ஒன்றை அரசனுக்காக வைத்துவிட்டு, மற்றையிரண்டையும் கொணர்ந்தேன். இதோ! உனக்கொன்று. நான் போய் வருகிறேன்" என்று கூறி, ஒரு இரத்தினத்தைக் கொடுத்துவிட்டுச் சென்றான். உடனே அரசனும் தனது பொக்கிஷத்துள் நுழைந்து, கோபாலன் கூறியது உண்மையெனக் கண்டு மகிழ்ந்து அரண்மனை சேர்ந்தான்.

மறுநாட் காலையிற் பாண்டியனது சபை கூடியது. அச்சமயம் பாண்டியன் தனது மந்திரிகளுள் ஒருவனை நோக்கி, "மந்திரீ! நேற்று இரவு நமது பொக்கிஷசாலையில் திருடர் புகுந்ததாகக் கனவு கண்டேன். ஆகையால் நீ உடனே பொக்கிஷசாலைக்குச் சென்று விஷயத்தை அறிந்துவா" என்று கட்டளையிட்டான். மந்திரியும் அதன்படியே சென்று பார்த்துத் தனக்குள், "திருடர்கள் இரண்டு இரத்தினங்களை மாத்திரம் கொண்டு சென்

றிருக்கின்றனர். மிகுதியுள்ள இந்த மூன்றும் இரத்தினத்தையும் நாம் எடுத்துக்கொண்டு களவு போனதாக அரசரிடம் சொல்லி விடலாம்" என்று எண்ணி, மூன்றுவது இரத்தினத்தைத் தன் உடைக்குள் மறைத்துச் சபை சேர்ந்தான்.

"அரசே! திருடர் மூன்று இரத்தினங்களை மாத்திரம் எடுத்துச் சென்றிருக்கின்றனர்" என்றான். அரசன், "என்ன! மூன்று இரத்தினங்களையுமா?" என்று வற்புறுத்திக் கேட்டான். மந்திரி, "ஆம்" என்றான். உடனே பாண்டியன் அங்கிருந்த காவலனை அழைத்து, மந்திரியின் உடையைச் சோதிக்கச் செய்தான். மூன்றுவது இரத்தினம் அகப்பட்டது. சபையோர் இதைக் கண்டு ஆச்சரியப்பட்டனர். அப்பொழுது பாண்டியன், முன் இரவு நடந்த விஷயங்களைச் சபையோருக்குக் கூறி, "பொய் கூறியதற்காக இந்த மந்திரி நமது நாட்டை விட்டு நீங்கிவிட வேண்டும். திருட்டுத் தொழிலிலும் அஞ்சாது உண்மையே கூறிய கோபாலனுக்கு இம்மந்திரி வேலையைக் கொடுக்கிறேன்" என்றான். கோபாலனை உடனே அழைத்துவரக் கட்டளையிட்டான்.

அவ்வாறே கோபாலன் வந்ததும் அரசன் அவனை நோக்கி, "கோபாலா! களவுத் தொழில் செய்வதில் உண்மை யுரைப்பவரை நான் கண்டதில்லை. உனது உண்மைக்கு மகிழ்ந்து, உனக்கு மந்திரி வேலை கொடுத்திருக்கிறேன். உண்மைக்கு என்றும் மேன்மை உண்டு. இது நிச்சயம்" என்று கூறினான். கோபாலனும் முதல் தடவை உண்மை பேசிய

தற்கே தனக்கு மந்திரிப் பதவி வாய்த்ததை அறிந்து, தனது தீத்தொழில்களை யெல்லாம் அறவே ஒழித்து, நாளடைவில் முதல் மந்திரி பதவியும் அடைந்து மிகுந்த மேன்மையுடன் வாழ்ந்தான்.

சத்தியமே ஜெயம்.

---

## 15. விவசாயம்

நம் இந்திய மக்களிற் பெரும்பாலோர் விவசாயத்தையே தங்கள் முக்கியத் தொழிலாய் நம்பியிருக்கின்றனர். "உழுதுண்டு வாழ்வதற் கொப்பில்லை கண்டீர், பழுதுண்டு வேறோர் பணிக்கு" என்ற முதுமொழிப்படி நம் நாட்டினர் பண்டுதொட்டு உழுதுண்டு வாழ்வதையே கைக்கொண்டு வந்திருக்கின்றனர். அநேக ஆயிர வருஷங்களாக நம்மவர் விவசாயம் செய்து வந்ததும், அன்று கொண்ட வழக்கங்களையே இன்றும் அனுசரித்து வருகிறார்கள். புது வழக்கங்களை அனுசரிப்பதும், அவற்றாற் பயன் பெறுவதும் நம்மவருக்குத் தெரியாத விஷயம். "பருவத்தே பயிர் செய்" என்ற வாக்கியத்தின் பொருளை யறியாத உழவன் நம் நாட்டில் ஒருவனும் இல்லை. முன்காலத்தில் நம் தேசம் கைத்தொழிலிலும் வியாபாரத்திலும் சிறந்து விளங்கியது. ஆனல் பிற்காலத்தில் அவை க்ஷீணமடையவே விவசாயம் மேன்மேலும் ஓங்குவதாயிற்று. தவிரவும் விவசாயத்திற்கு வேண்டிய வசதிகள் நம் தேசத்தில் ஏராளமாய் உண்டு.

பூர்வகாலத்தில் நம் முன்னோர்கள் உழவின் பொருட்டு, கலப்பை என்ற மரக் கருவியைக் கண்டு பிடித்தார்கள். அக் கருவியில் மூன்று பாகங்கள் உண்டு. முக்கியமான பாகம் கலப்பையின் அடிப் பாகம். அது கூர்மையாய், நிலத்தில் பள்ளம் செய்யத் தக்கவாறு அமைந்திருக்கிறது. அடிப் பாகம்



மரத்தால் அமைந்திருப்பதால், அதற்கு உதவியாய் இரும்பினுல் செய்யப்பட்ட கொழு என்ற கூர்மையான கருவி அதனேடு இணைக்கப்படும். கொழு இணைக்கப்பட்ட அப்பாகத்துக்குத் துன்னூசி என்று பெயர். கொழு உண்டாக்கிய பள்ளத்தின் வழியே துன்னூசி எளிதாய்ச் செல்லும். கை பிடிக்கும் பாகம் மேழி எனப்படும். மேழிக்கும் துன்னூசிக்கும் இடையில் ஒரு நுகத்தடி சேர்க்கப்படும். நுகத்தடியில் இரண்டு மாடுகள் கட்டப்படும். இது பழைய மாதிரிக் கலப்பை. இக்காலத்தில் புதுமாதிரிக் கலப்பைகள் பல வந்திருக்கின்றன. 'அகல உழுவதிலும் ஆழ உழு' என்ற வாக்கியப்படி செய்ய வேண்டுமாயின், புதுமாதிரிக் கலப்பைகளை உபயோகிப்பதே நலம். விவசாய இலாகாவில் கிடைக்கும் இரும்புக் கலப்பைகள் நன்கு உழைக்கின்றன.

நெல், கரும்பு முதலிய பயிர்கள் விளையக்கூடிய நிலம் நன்செய் எனப்படும். வரகு, கேழ்வரகு, சோளம், துவரை, உளுந்து முதலிய தானியங்கள் விளையும் நிலம் புன்செய் எனப்படும். புன்செயில் தோட்டம் என்றும், காடு என்றும் இருவகை உண்டு. நன்செய்



நிலங்களுக்குத் தண்ணீர் அடிக்கடி வேண்டும். ஆதலால் பெரிய குளங்கள், ஏரிகள், தண்ணீர் இடையரு து ஓடும் வாய்க்கால்கள், நதிகள் முதலியவை உள்ள இடங்களிலேயே நன்செய் நிலங்கள் மிகுதியாய் இருக்கும். தோட்டப் பயிர்களுக்குக் கிணற்று நீரே போதுமானது. ஆனால் அடிக்கடி தண்ணீர் இறைக்க வேண்டும். காட்டுப்பயிர்களுக்கு, சாதாரணமாய்ப் பெய்யும் மழையும், பயிர்கள் மிகவும் காய்ந்து போகாமல் இறைக்கப்படும் தண்ணீரும் போது

மானவை. இப்படிப் பலவகைப் பட்ட பயிர்களுக்கும் மண், நீர் என்ற இரண்டுமே முக்கியம் என்று அறிகிறோம்.

நெல், தானியங்கள், பிற புன்செய்ப் பயிர்கள் முதலியவைகளில், சில மூன்று மாதம், சில நான்கு மாதம், சில ஆறு மாதம் முதலிய பல வேறுவகைப் பட்ட காலங்களிற் பலன் கொடுக்கும். பயிர் செய்யப் புகுவோன், இன்ன நிலத்தில் இன்ன பயிரை இன்ன காலத்தில் பயிரிட்டால் இன்ன பலன் கிடைக்கும் என்று தெளிவாய் அறிந்திருக்கவேண்டும். இன்னின்ன பயிர்களின் வளர்ச்சிக்கு இன்னின்ன இடையூறுகள் உண்டாகும். அவற்றை இன்னின்ன முயற்சிகளால் பரிகரிக்கலாம் என்பதையும் அறிந்திருத்தல் நலம். இவையறியாது உழவுத் தொழிலை மேற்கொள்பவன் நஷ்டமடைவது அவன் குற்றமேயன்றி, நிலம், காலம் முதலியவற்றின் குற்றமாகாது. இவற்றைக் கற்பிக்கவே இக்காலத்தில் பல விவசாயக் கலாசாலைகள் ஏற்பட்டுள்ளன. விவசாய இலாகா அதிகாரிகளும் குடிகளுக்குப் பல விதத்திலும் உதவி புரிகின்றனர்.

மேழிச் செல்வம் கோழைபடாது.

---

## 16. திருவாங்கூர்

நருமதை நதிக்கரையில் ஜமதக்கினி என்னும் ஒரு முனிவர் வசித்தார். அவர் மனைவியின் பெயர் **ரேணுகாதேவி.** அவள் கற்பிற் சிறந்தவள். தனது கற்

பின் மகிமையால் ஆற்று மணலிற் குடம் செய்து அதில் நீர் மொண்டு செல்வது வழக்கம். ஒரு தினம் அவ்வாறு ஜலம் மொள்ளுகையில் கார்த்தவீரியார்ச் சுனன் என்ற அரசன் சாயலை நீரில் கண்டு உற்று நோக்கினாள். அதனால் நேரமானதும் தவிர, மண்ணாற் செய்த குடமும் கலைந்து போயிற்று. மறுபடியும் குடம் செய்யவும் இயலவில்லை; ஜலமின்றி வீடு சேர்ந்தனள். நடந்த சங்கதிகளை யறிந்த முனிவர் கோபங் கொண்டார். தன் மனைவியைக் கொலை செய்யத் தீர்மானித்தார்.

தமது மக்கள் நால்வரையும் அழைத்து, தம் எண்ணத்தை அறிவித்தார். அவர்களில் மூத்த மூவரும் அதற்கு இணங்கவில்லை. கடைசியவனான பரசுராமனே அக்கட்டளையைச் சிரமேற்கொண்டு, தனது தாயான ரேணுகாதேவியைக் கொன்றான். இஃதறிந்த ஜமதக்கினி முனிவர் மனங்களித்து, வேண்டிய வரமொன்று கேட்க உத்தரவளித்தார். தாயையிழந்ததால் மனம் வருந்திய தனயனே, தந்தையை அடிபணிந்து, "தந்தாய்! என தருமைத் தாயை உயிருடன் காணும் பாக்கியம் எனக்களித் தருளும்" என மன்றாடினன். முனிவரும் பரசுராமனது குணத்திற்கு மெச்சி அவ்வாறே அருளினர். பரசுராமனுக்கோ தாயைக் கொன்ற பாதகம் மனத்தைவிட்டு அகலவில்லை. அப்பாதகத்தினை யொழிக்க ஓர் உபாயம் தேடலானான். அது காரணமாகவே ஒரு தினம் கோகர்ணத்தில் நின்று தனது மழுவைத் தெற்கே கடலில் எறிந்தான். உடனே அவ்விடத்தில் ஒரு பூமி ஏற்பட்டது. அதுதான்

கேரளம். இக்கேரளத்தை வேதியர்க்குத் தானமளித்துத் தன் பாவத்தை நிவர்த்தி செய்துகொண்டான்.

இக்கேரளமே தற்போது திருவாங்கூர் ராஜ்யமாக விளங்குகிறது. இவ்விராஜ்யம் பண்டைக் காலத்திலேயே மிகுந்த மேன்மை பெற்றிருந்தது. கி. மு. 1000 வருஷங்களுக்கு முன் பினீஷிய வியாபாரிகள் இங்கிருந்து யானைத் தந்தம், சந்தனம், வாசனைத் திரவியங்கள் முதலிய அரும் பொருள்களைக் கொண்டு சென்றனர். கொல்லம் பெரிய வியாபார ஸ்தலமாயிருந்தது. அரேபியா, பாரசீகம், ஐரோப்பா முதலிய நாடுகளுடன் வியாபாரம் நன்கு நடைபெற்றது.

திருவாங்கூர் ராஜ்யம் தற்காலம் 175 மைல் நீளமும் சுமார் 75 மைல் அகலமுமுள்ளது. இந்நாடு கடற்கரை யோரமாய், பல நதிகளுடன் சிறந்து விளங்குகிறது. இங்கு தென்னந் தோப்புகள் மிக அதிகம். இப்போது இதனைப் பரிபாலிப்பவர் ஸ்ரீ சித்திரைத் திருநாள் மகாராஜா. இவர் 1924-ம் வருடம் மகுடாதிபதியானர். அச்சமயம் இவர் அதியௌவனமாயிருந்ததால் இவருக்குப் பதிலாக அரசுபுரிய சேதுலெக்ஷ்மி பாய் இராணியவர்கள் நியமிக்கப்பட்டார்கள். பின் 1931-ம் வருஷத்தில் மகாராஜா அவர்கள் ராஜ்யபாரம் வகித்தார்கள்.

இத்திருவாங்கூர் ராஜ்யம் இப்போது நவ நாகரீகங்களில் சிறந்து விளங்குகின்றது. இதன் தலைநகரம் திருவனந்தபுரம். இந் நகரில், வீதிகள் மிகவும்

நன்றாகவும் நீளமாகவும் அமைந்திருக்கின்றன. கோட்டைக்குள் மகாராஜாவும் அரச குடும்பத்தினரும் வசிக்கின்றனர். உலகம் போற்றும் ஸ்ரீ பத்மநாப



திருவாங்கூர்—கொச்சி ராஜப்பிரமுகர்

சுவாமி கோவில் இந்நகரில்தான் இருக்கிறது. இக் கோவிலில் ஆறு வருஷங்கட்கு ஒரு முறை லக்ஷ தீப உற்சவம் நடைபெறுகிறது. ஆயிரக்கணக்கான

ஜனங்கள் இக்கோவிலைக் காணச் செல்வர். இது அனந்த சயனம் என்றும் சொல்லப்படும்.

மியூஸியம் என்னும் பொருட்காட்சிச் சாலையும், மிருகக் காட்சிச் சாலையும் யாவரும் அவசியம் காணவேண்டியவைகள். ஸ்ரீமூலம் சட்டசபை, ஹைக்கோர்ட்டு, சித்திர கலா சாலை, மகாராஜா கல்லூரிகள், சட்டக் கல்லூரி முதலியவைகள் சிறந்து விளங்குகின்றன. இந்நகரில் சிறு துறைமுகமும் உண்டு. பெண் மக்கள் பயிலுவதற்குத் தனிக் கலாசாலைகள் அநேகம் இருக்கின்றன; நன்கு கற்ற பெண்களில் அநேகர் இங்கேயே உத்தியோகம் பார்க்கின்றனர். நம் ராஜதானியில் பெண் மக்கள் முன்னேற்றமடைந்துள்ள நாடு இதுவே. அநேகமாக இந்நாட்டில் படிக்கத் தெரியாதவர்களைப் பார்ப்பது மிக அரிது.

இவ்விராஜ்யத்துக்கு ரயில் மூலமாகவும், கால்வாயில் படகு மூலமாகவும் செல்லலாம். ரயில் மார்க்கத்தில் திருவனந்தபுரம் சென்ட்ரல் ஸ்டேஷன் நன்ருய்க் கட்டப்பட்டிருக்கிறது. திருவனந்தபுரத்திலிருந்து சுமார் 26 மைல் தூரத்தில் வர்க்கலை என்னும் பெயர் பெற்ற ஜனர்த்தன க்ஷேத்திரம் இருக்கின்றது. கோடை காலத்தில் மகாராஜா இங்குத் தங்கச் செல்வது வழக்கம்.

1—7—1949 முதல் திருவாங்கூர் ராஜ்யமும் கொச்சி ராஜ்யமும் ஒன்றுபட்டு ஐக்கிய கேரளம் என்ற பெயருடன் இந்திய யூனியனுடன் இணைக்கப்பட்டிருக்கிறது. ஐக்கிய கேரளத்திற்குத் தலைவராக ஸ்ரீ சித்திரைத் திருநாள் மகாராஜா இருந்து வருகிருர்.



---

## 17. மாணிக்கவாசகர்

சைவ சமயாசாரியர், திருநாவுக்கரசர், திருஞான சம்பந்தர், சுந்தரமூர்த்தி சுவாமிகள், மாணிக்க வாசகர் எனும் நால்வராவர். இவர்களுள் மாணிக்க வாசகர் பாண்டிய நாட்டில் மதுரைக்கு ஒரு காத தூரத்தில் உள்ள திருவாதவூரில் வேதியர் குலத்தில் உதித்தவர். இவர் இளமையிலேயே நல்லாசிரியரை யடுத்து வடமொழி, தென்மொழி என்ற இரண்டு பாஷையிலும் பூரண பாண்டித்தியம் அடைந்தார். பிறகு வேதாந்த சாஸ்திரங்கள் பயின்று சித்தாந்த சாஸ்திரத்திலும் விற்பன்னரானார்.

இவரது கல்விச் சிறப்பைக் கேள்வியுற்ற அரிமர்த்தன பாண்டியன் என்னும் தமிழ் நாட்டு மன்னன் இவரது சம்மதி பெற்று, இவருக்கு மந்திரிப் பதவியை அளித்தான். பாண்டியனது மந்திரிப் பதவியை வகித்த திருவாதவூரரும், தமது கல்வி வல்லமையால் அரசியலைக் கவனித்து வந்தார். பாண்டியனும் ராஜ்ய பரிபாலனம் முழுவதையும் இவரிடமே ஒப்புவித்திருந்தான். அக் காலத்தில் நாடெங்கும் தெய்வ உணர்ச்சி பரவி, நீர்வளம், நிலவளம் மிகுந்து, குடிகள் ராஜபக்தி மிகுந்து, குறைவின்றி வாழ்ந்து வந்தனர்.

இவ்வாறிருக்கும் நாளில் ஒரு நாள், அரசனது அவையில் அவனது குதிரைக்காரர் வந்து, "மகா ராஜா! நமது குதிரைப் பந்தியில் உள்ள குதிரை களில் அநேகம் வயதில் மூத்து வேலைக்கு உதவாத நிலையில் இருக்கின்றன. பல இறந்து போயின. இளமையும் வலிமையும் உள்ள குதிரைகள் மிகச்

சிலவே. ஆகையால், இப்போது அவசியமாகப் புதுக் குதிரைகள் வாங்கி வரவேண்டும். தவறினல் நமக்கு மிகவும் கஷ்டம்தான் ஏற்படும்" என்று தெரிவித்தார்கள். இது கேட்ட அரசன் திருவாதவூரரை நோக்கி, "சுவாமி! தாங்கள் நிதிச்சாலையிலிருந்து வேண்டிய அளவு திரவியத்தை எடுத்துச் சென்று, நல்ல குதிரைகளாகப் பார்த்து வாங்கி வாருங்கள்" என்று கூறினன். திருவாதவூரரும் அவ்வாறே குதிரை வாங்கிவரும்பொருட்டு மேற்குக் கடற்கரையோரமாய் இருந்த திருப்பெருந்துறை என்னும் பட்டணத்துக்குப் போனர்.

அங்கு இவர் முற்பிறப்பில் செய்த புண்ணிய வசத்தால் ஒரு குருந்த மரத்தின் நிழலில் ஆயிரம் முனிவர்களுக்கு உபதேசிக்கும் திருக்கோலத்துடன் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானைத் தரிசித்து, அவரிடம் ஞானேபதேசம் பெற்றுக்கொண்டார். பிறகு அந்த இடத்தில் பெரியதோர் ஆலயம் கட்ட எண்ணங்கொண்டு, குதிரை வாங்கக் கொணர்ந்த பொருளைக்கொண்டு கோவில் கட்டும் திருப்பணியைச் செய்து முடித்தார். பணம் முழுவதும் செலவாய் விட்டது. மாணிக்கவாசகரோடு வந்திருந்த ஏவலர் அவர் செய்த செயல்களைப் பார்த்து, மதுரைக்குப் போய்ப் பாண்டியனிடம் தெரிவித்தனர். பாண்டியன் கடுங்கோபம் கொண்டான். மாணிக்கவாசகரும் ஊருக்குத் திரும்ப எண்ணிக் கடவுளைத் தியானித்து, "பரம் பொருளே! அரசன் பொருளைக் குதிரை வாங்காமல் உமது ஆலய நிர்மாணத்தின் பொருட்டுச் செலவிட்டுவிட்டேன். அரசன் இதற்காக என்னைப்

பாராட்டினாலும், பழித்துத் தண்டித்தாலும் எல்லாம் உமது பொறுப்பே. என் செயல் ஒன்றுமில்லை" என்று துதி செய்தார். சிவபெருமான் அசரீரியாக "அன்பனே! குதிரைகள் ஆடி மாதத்தில் வந்து சேரும் என்று அரசனிடம் தெரிவித்திடுக. நீ சிறிதும் கவலைகொள்ளவேண்டாம். குதிரைகள் குறித்த காலத்தில் வரும்" என்று கூறினார்.

திருவாதவூரரும் "இனி எது வரினும் வருக. எல்லாம் இறைவன் செயலே" என்று துணிந்து மதுரைக்குத் திரும்பினார். பாண்டியன் அவரைக் கண்டதும் மரியாதைகள் செய்யாமல், குதிரைகள் வாங்கியதைப் பற்றி விசாரிக்க ஆரம்பித்தான். திருவாதவூரரும், "அரசே! நான் கொண்டுபோன பொருளுக்கும் அளவில்லை. வாங்கிய குதிரைகளுக்கும் கணக்கில்லை. குதிரைகள் ஆடிமாதம் வந்துசேரும்" என்று கூறினார். பாண்டியன் இதை நம்பவில்லை. இருந்தாலும் 'ஆடி மாதம் வரை பொறுப்போம்' என்று வாளாவிருந்தான். ஆடி மாதமும் பிறந்தது. அப்போதும் குதிரைகள் வராமற்போகவே, அரசன் மாணிக்கவாசகரைச் சிறையில் அடைத்துத் தண்டித்தான். அவர் தம்மை மறந்து சதா இறைவனையே தியானம் செய்துகொண்டிருந்தார்.

சிவபெருமான் தனது பக்தர் படும்பாட்டைக் கண்டு மனமிளகி ஒரு குதிரைக்கார வேஷம் பூண்டு, காட்டிலேயுள்ள நரிகளையெல்லாம் பரிகளாக்கி நடத்திக்கொண்டு வந்தார். அக் குதிரைகள் எல்லாலக்ஷணங்களும் அமைந்தவைகளாயிருந்ததைக் கண்ட அரசன் சந்தோஷித்து, மாணிக்கவாசகரை

விடுவித்தான். புதுக் குதிரைகள் பழைய குதிரைகளோடு குதிரைப் பந்தியிற் கட்டப்பட்டன. நரிப் பரிகள் நடு இரவில் நரிகளாய் மாறி, பழைய குதிரைகளையும் கடித்துக் கொன்றுவிட்டுக் காட்டுக்கு ஓடிவிட்டன. இதை யறிந்த அரசன் மணிக்கவாசகரை மறுபடியும் சிறையிலிட்டுத் தண்டித்தான்.

அப்பொழுதும் வாதவூரர் கடவுளையே தியானித்திருந்தார். அது சமயம் மதுரைக்கு வடக்கில் ஊரோரமாய் ஓடும் வைகை நதி பெருக்கெடுத்து, நகரத்தை அழிக்கத் தொடங்கியது. வீட்டுக்கு ஒரு ஆள் வீதம் நகரிலுள்ளார் அனைவரும் வந்து வெள்ளம் நகரை அழிக்காவண்ணம் கரைபோட வேண்டும் என அரசன் ஆணையிட்டான். அதன்படி நகரிலுள்ளார் யாவரும் ஆளனுப்பினர். ஆனல் அந்நகரில் பிட்டு விற்று வாழும் வந்தி என்னும் கிழவியின் பங்குக்குக் கூலியாள் கிடைக்கவில்லை. அவள் ஊர் முழுவதும் தேடிக் கடைசியில் கடவுளைப் பிரார்த்தித்தாள். கடவுளும் அவள் பக்திக்கிரங்கித் தாமே கூலியாளாக வந்து, வந்தி கொடுத்த பிட்டை வாங்கியுண்டு வேலை செய்யாமல் படுத்துறங்கினர். அதுகண்ட பாண்டியன் அவரைப் பிரம்பால் அடித்தான். அடிக்கவே அவர் ஒரு கூடை மண்ணைக் கரையில் கொட்டிவிட்டு மறைந்தார். உடனே கரையும் முடிவுற்றது; வெள்ளமும் அடங்கியது.

வந்தியின் பக்தியையும், கடவுளின் செயலையும் அறிந்த அரசன் மனமுருகிக் கடவுளைத் துதித்தான். கடவுள் அவன்முன் தோன்றி, "அப்பா! பாண்டியா! உனது பொருளையெல்லாம் மாணிக்க

வாசகன் எனக்கே கொடுத்தான். நானும் மன முவந்து ஏற்றுக்கொண்டேன். நீ அவனைத் தண்டித் ததற்காகவே இவ்வகையில் வெள்ளம் வரும்படி செய் தேன். பிறகு வந்தியின் பக்திக்காகக் கூலியாளாய் வந்து கரையை அடைத்தேன். இனி நீ எனது பக்தனை விடுவித்து, அவன் இஷ்டம்போற் செல்ல விடுக" என்று கூறி மறைந்தார்.

உடனே அரசன் ஆனந்தமடைந்து மாணிக்க வாசகரை விடுவித்து, தன்னை மன்னிக்குமாறு அவரை வேண்டினன். அவரும் பாண்டியனது குணங்களைப் பாராட்டி, மந்திரித் தொழிலை விடுத்து வடக்கு நோக்கிச் சென்றார். சிதம்பரத்தில் பல காலம் கடவுளைத் தியானித்திருந்து, திருக்கோவையார், திருவாசகம் என்னும் பிரபந்தங்களைப் பாடினர். பிறகு பௌத்தரிற் பலரை வாதத்தில் வென்று, பலர் முன் னிலையில் சிவத்தோடு கலந்தார். அவரது நூல்கள் இன்றும் தமிழ் வேதமாக விளங்குகின்றன.

---

## 18. கடிகாரம்

நம் முன்னோர் சூரியனது உதவியால் பகற் காலத்திலும், நக்ஷத்திரங்களின் உதவியால் இராக் காலத்திலும் நாழிகைக் கணக்கிட்டுப் பொழுதறிந் தார்கள். தற்காலத்தில் எல்லாவற்றிற்கும் ஒவ்வொரு யந்திர சக்தி ஏற்பட்டதுபோல நவீன சாஸ்திரீகர் கடிகாரம் என்னும் புதுக் கருவியினல் பொழுதறிந்து கொள்ளுமாறு செய்திருக்கிறார்கள். ஒரு நாளை இருபத்து நான்காகப் பிரித்து ஒவ்வொரு பாகத்

துக்கும் மணி என்று பெயரிட்டார்கள். ஒவ்வொரு மணியை அறுபது நிமிஷங்களாகவும், ஒவ்வொரு நிமிஷத்தை அறுபது விநாடி (செக்கண்டு) களாகவும் பிரித்து சுலபத்தில் பொழுதறியும்படி ஏற்படுத்தியிருக்கின்றனர்.

இங்கு உள்ள படத்தைப் பாருங்கள். இது சுவரில் மாட்டக்கூடிய பெரிய கடிகாரத்தின் படம். இதன் மேல்பாகம் பெரியது; கீழ்ப் பாகம் சிறியது. மேல் பாகத்தில் ஒரு வெண்மையான வட்டத் தகட்டில் 1 முதல் 12 வரை உள்ள எண்கள் குறிக்கப்பட்டுள்ளன. இத் தகட்டின் மத்தியில் சிறிதும் பெரிதுமாக இரு முட்கள் காணப்படுகின்றன. இம்முட்கள் அந்த எண்களைக் காட்டிக் கொண்டே தகட்டில் சுற்றி வருவதிலிருந்து, மணி எத்தனை என்று தெரிந்து கொள்ளலாம். தகட்டின் மீதுள்ள எண்கள் பின்வருமாறு 1 முதல் 12 வரை யிருக்கின்றன.



| | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| I | II | III | IIII | V | VI | VII | VIII | IX | X | XI | XII |
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 |

கடிகாரத்தின் கீழ்ப் பாகத்தில் வட்டமான கனத்த பித்தளைத் தகடு ஆடிக்கொண்டே யிருக்கிறதல்லவா? அதுதான் பெண்டுலம் என்று சொல்லப்படுவது. இவ்வாறு இது ஆடுவதால்தான் மேல்

பாகத்தில் உள்ள முட்கள் யந்திர மூலமாய் நகர்ந்து நகர்ந்து சுற்றி வருகின்றன. இக் கடிகாரத்தின் தலைப்பில் XII என்ற எண் இருக்கிறது. அதன் வலப்பக்கத்திலிருந்து I முதல் XI வரை உள்ள எண்கள் வட்டமாக இருக்கின்றன. தகட்டில் இருக்கும் ஒரு எண்ணுக்கும் மற்றொரு எண்ணுக்கும் நடுவே சிறிது இடம் இருக்கிறது. அந்த இடம் ஐந்து பாகங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றது. இப்படியே 12–மணிக்கும் இடையில் ஐந்து பாகங்கள் வீதம் மொத்தம் 60 பாகங்கள் இருக்கின்றன; இவைதான் நிமிஷங்கள்.

இப்பொழுது, கடிகாரத்தைக் கவனியுங்கள். பெரிய முள் விரைவாகவும், சிறிய முள் மெதுவாகவும் நகருவதைக் காணலாம். பெரிய முள் XII என்ற எண்ணிலிருந்து நகர்ந்து நகர்ந்து திரும்ப XII-க்கு வந்து சேரும்போது சிறிய முள் ஒரு எண்ணிலிருந்து அடுத்த எண்ணுக்கு வந்திருக்கும். இதுதான் ஒரு மணி நேரம். இவ்வாறு பெரிய முள் பன்னிரண்டு தடவை சுற்றி வந்தால், சிறிய முள் ஒரு தடவை சுற்றும். இந்தக் காலம் பன்னிரண்டு மணி நேரம். சிறிய முள் இரண்டு தடவை சுற்றிவந்தால் 24 மணி நேரம் அல்லது ஒரு நாள் ஆகும்.

பெரிய முள், ஒரு எண்ணிலிருந்து மற்றொன்றுக்கு வர 5 நிமிஷங்கள் ஆகின்றன. பெரிய முள் XII என்ற எண்ணிலிருந்து III என்ற எண்ணுக்கு வந்தால் 15 நிமிஷங்களாகும். இதற்குக் 'கால்மணி' என்று பெயர். VI என்ற எண்ணுக்கு வந்தால் 30 நிமிஷங்களாகும். இதற்கு 'அரை மணி' என்று பெயர். IX என்ற எண்ணுக்கு வந்தால் 45 நிமிஷங்

கள், அதாவது 'முக்கால் மணி' ஆகும். பிள்ளைகளே! இந்தக் கணக்குப்படி கடிகாரத்தைப் பார்த்து, இப்போது மணி என்ன வென்று சொல்லுங்கள்.

சுவரில் மாட்டக்கூடிய இந்தப் பெரிய கடிகாரத்தைத் தவிர, சட்டைப் பையில் போட்டுக்கொள்ளவும், கை மணிக்கட்டில் கட்டிக்கொள்ளவும், மோதிரங்களில் அமைத்துக் கொள்ளுதற்கும், ஏற்ற சிறு கடிகாரங்கள் உள்ளன. இம்மாதிரி சிறு கடிகாரத்தில் VI என்ற எண் உள்ள இடத்தில் ஒரு சிறு வட்டம் இருக்கிறது. அதில் 10, 20, 30, 40, 50, 60 என்ற எண்கள் குறிக்கப்பட்டிருக்கின்றன. ஒரு சிறிய முள் வெகு வேகமாக அதில் ஓடிக்கொண்டு இருக்கிறது. இச்சிறு வட்டத்திலுள்ள ஒவ்வொரு கோடும் ஒரு செக்கண்டு அல்லது விநாடியைக் குறிக்கும். இதிலுள்ள சிறுமுள் ஒருதடவை சுற்றி வந்தால் 60 செக்கண்டுகள் அல்லது 1 நிமிஷமாகும். அப்போது பெரிய முள் ஒரு நிமிஷத்தைக் காட்டும். இவ்வாறு பலவித கடிகாரங்களால், நாம் வெகு சுலபத்தில் நேரத்தை அறிந்து கொள்ளுகிறோம். கடிகாரம் நமக்கு மிகவும் உபயோகமுள்ளது.

---

## 19. சமயோசித புத்தி

கங்கைக் கரையிலுள்ள ஒரு நாவல் மரத்தில் சுமுகன் என்ற குரங்கு வசித்திருந்தது. அந்த நதியில் ஒரு முதலை தன் மனைவியோடு வாழ்ந்திருந்தது. நாளடைவில் குரங்குக்கும் முதலைக்கும் சிநேகம்

உண்டாயிற்று. தினந்தோறும் குரங்கு தனக்குக் கிடைக்கும் பழங்களில் சிலவற்றை முதலைக்குக் கொடுக்கும். முதலை அதைத் தின்று சந்தோஷித்திருக்கும்.

ஒரு சமயம் சுமுகன் வசிக்கும் மரத்தில், நாவற் பழம் ஏராளமாகப் பழுத்தது. குரங்கு அவைகளைப் பறித்துத் தன் நேசனுக்குக் கொடுக்க, அதுவும் வயிறாரத் தின்று வந்தது. ஒரு நாள் குரங்கு மிகவும் அதிகமாகப் பழங்கள் கொடுக்கவே, முதலை வேண்டிய மட்டும் தின்று, எஞ்சியதைத் தன் மனைவிக்குக் கொண்டுபோய்க் கொடுத்தது. பெண் முதலையும் அவற்றைத் தின்றுவிட்டு ஆண் முதலையை நோக்கி, "நாதா! இந்த அருமையான பழம் உமக்கு எப்படிக் கிடைத்தது?" என்று கேட்டது. ஆண் முதலை, "பெண்ணே! என் சிநேகிதன் ஒரு நாவல் மரத்தில் வசிக்கிறான். அவன் அளித்த பழங்கள் தான் இவை" என்றது. பெண் முதலை, "அவர் இப்படிப் பட்ட பழங்களைத் தினந்தோறும் தின்பவரல்லவோ?" என்று கேட்க, ஆண் முதலை, "ஆமாம்! ஏராளமாய்த் தின்கின்றான்" என்றது.

பெண் முதலை :—நாதா! இம்மாதிரிப் பழங்கள் தின்பவனுடைய ஈரல் மிகவும் ருசியாய் இருக்கும். அந்த ஈரலைத் தின்றால் என் தேகமும் புஷ்டியடையும். ஆகையால் உடனே சென்று, அவனுடைய ஈரலைக் கொண்டுவாரும்.

ஆண் முதலை :—பெண்ணே! ஏன் இப்படிப் பிதற்றுகிறாய். எனதருமை நேசன் ஈரலை எப்படி நான்

எடுத்து வருவது? இது நடவாத காரியம். அந்த எண்ணத்தை விட்டுவிடு.

பெண் முதலை :—நீர் இப்போது கொண்டுவராவிடில் நான் வேறு ஆகாரம் உண்ணேன். உமது கண் முன்பாகவே என் உயிரை மாய்த்துக்கொள்வேன். இது நிச்சயம்.

ஆண் முதலை :—ஏன் வீண் பிடிவாதம் செய்கிறாய்? தினந்தோறும் எனக்கு உபகாரம் செய்யும் நேசனை மோசஞ் செய்யலாமா?

பெண் முதலை :—இதில் மோசமொன்றுமில்லை. உமது நேசனை நான் விருந்துண்ண அழைத்ததாகக் கூறி இங்குக் கொண்டுவாரும். அப்புறம் நான் பார்த்துக் கொள்ளுகிறேன்.

“சரி! அப்படியே செய்கிறேன். நீ சந்தோஷமாயிரு” என்று ஆண் முதலை சொல்லிற்று. இது கேட்ட பெண் முதலை சந்தோஷ மடைந்திருந்தது.

ஆண் முதலை ஆற்றங்கரைக்கு வந்து, வழக்கம் போல நண்பனைக் கூப்பிடுவதை விடுத்து வாளாவிருந்தது. அது கண்ட குரங்கு முதலையை நோக்கி, “நண்பா! எப்போதும்போல் நீ சந்தோஷத்துடன் இராமல், வருத்தத்துடன் இருக்கிறாப்போலிருக்கிறதே. என்ன சங்கதி?” என்று கேட்டது. முதலை, “நேசனே! நீ கொடுத்த பழங்களைக் கொண்டு போய் என் மனைவிக்குக் கொடுத்தேன். அவைகளைத் தின்று சந்தோஷித்த அவள், ‘இது ஏது’ என்றாள். நான் உன்னைப்பற்றி அவளுக்குக் கூறினேன். அது கேட்ட அவள் மனமகிழ்ந்து உனக்கு விருந்து

வைக்கவேண்டுமென்று விரும்பி, அதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்திருக்கிறாள். நீ வருவாயோ, வரமாட்டாயோ என்று யோசித்து வருந்திக்கொண்டிருக்கிறேன்" என்றது.

முதலையின் நயவஞ்சகமான சொல்லை நம்பிய சுமுகன், "அன்பா! நான் விருந்துக்குக் கட்டாயம் வருவேன். ஆனால் நான் தண்ணீருக்குள் வரமுடி



யாதே. அதுபற்றித்தான் வருந்துகிறேன்" என்று கூறியது. அதுகேட்ட முதலை தனது காரியம் கைகூடுமென்று எண்ணி, "நேசா! அதற்கெல்லாம் நீ அஞ்சவேண்டாம்; தைரியமாய் என் முதுகில் உட்கார்ந்துகொள். நான் உன்னை ஜாக்கிரதையாய் என் மனைவியிடம் கொண்டு சேர்க்கிறேன்" என்றது. குரங்கும் ஒத்துக்கொண்டு முதலையின் முதுகின்மேல் ஏறிக்கொண்டது.

சுமுகனை முதுகில் சுமந்துகொண்டு சென்ற முதலையோ சிறிது தூரம் தண்ணீரில் சென்றதும், 'இனி இக்குரங்கு என்னைவிட்டுத் தப்பமுடியாது' என்று எண்ணிக் குரங்கைப் பார்த்து, "நண்பா! உன் நிலைமைக்கு நான் மிகவும் இரங்குகிறேன். என் மனைவி உன் ஈரலைத் தின்ன இச்சைகொண்டாள். அவளது விருப்பத்தை நிறைவேற்றவே இப்போது உன்னைக் கொண்டுபோகிறேன். ஆகையால் உன் உயிரின்மேல் வைத்திருக்கும் ஆசையைவிட்டு, இறப்பதற்கு ஆயத்தமாயிரு" என்று உண்மையைக் கூறியது.

அது கேட்ட சுமுகன் சிறிதும் மனந் தளராது, "நண்பா! என்ன காரியம் செய்தாய்? இதை என்னிடம் முன்னமே சொல்லக்கூடாதா? சொல்லியிருந்தால் நான் வசிக்கும் மரத்தில் காயப்போட்டிருக்கும் என் ஈரலையும் எடுத்துக்கொண்டே வந்திருப்பேனே. இப்போது ஈரல் இல்லாத நான் வந்து யாதொரு பயனும் இல்லையே. இப்போதென்ன செய்வது?" என்று சமயோசித புத்தியுடன் கூறியது. அதுகேட்ட முதலை மனம் வருந்தி, "இதற்கு என்ன செய்யலாம்?" என்று கேட்டது. குரங்கு, "நண்பா! உடனே என்னை மரத்தடியில் கொண்டு போய்விட்டால், நான் மரத்திலேறி ஈரலை எடுத்துக் கொண்டு வருகிறேன்" என்றது. முதலையும் அதை நம்பி, குரங்கைக் கரை சேர்த்தது. சேர்த்ததும் அக் குரங்கு கரையில் தாவி மரத்தின்மேல் ஏறிக் கொண்டு, "இன்று நமன் வாயிலிருந்து தப்பினேம்" என்று மகிழ்ந்திருந்தது.

நெடுநேரமாகியும் குரங்கு திரும்பாததைக்கண்ட முதலை குரங்கைக் கூப்பிட்டது. ஆனால் குரங்கோ, "அடா மூடா! நம்பிக்கைத் துரோகி! எவனாவது தன் ஈரலை எடுத்து வெளியில் வைப்பானா? அப்படி வைத்தால் அவன் உயிர் வாழ முடியுமா? இனி இங்கு நில்லாதே ஓடிவிடு. உன் நட்பு எனக்குத் தேவையில்லை" என்று கோபத்துடன் கூறியது. அது கேட்ட ஆண் முதலை மனைவியிடம் போகப் பயந்து, அங்கேயே உயிர் விட்டது. பெண் முதலையும் குரங்கின் ஈரல் கிடைக்காததால் வருந்தி இறந்தது. ஆகையால் ஆபத்தில் மனந்தளராது சமயோசிதம்போல் புத்தியை உபயோகித்து அவ்வாபத்திலிருந்து தப்பவேண்டும்.

அடுத்தவரை ஒருநாளும் கெடுக்கவேண்டாம்.

---

## 20. விதையின் கதை.

பிள்ளைகளே! விதையின் கதை மிகவும் விநோதமானது. மிகச் சிறிய வித்திலிருந்து, பிரம்மாண்டமான ஆலமரம் உண்டாகிறதல்லவா? அது போலவே ஒவ்வொரு மரத்துக்கும் செடிக்கும் ஒவ்வொரு விதமான விதை உண்டு. இதன் விநோதத்தைப் பற்றி இந்தப் பாடத்தில் உங்களுக்குக் கூறுவோம்.

விதைகளில் பலவிதம் உண்டு. அவைகள் தோல், பருப்பு, முளைக்கும் விதம் இவைகளுள் வித்தியாசப்படும். தேங்காய் போன்ற சில விதைகளுக்குக் கடினமான தோலும், அவரை, துவரை போன்ற சில விதை

களுக்கு மெல்லிய தோலும் உண்டு. விதைகளில் ஒற்றைப் பருப்பு உள்ளவையும் இரட்டைப் பருப்பு உள்ளவையும் உண்டு. நெல், சோளம், கேழ்வரகு, கோதுமை, தேங்காய் முதலியவைகளின் விதைகள் ஒற்றைப் பருப்பு விதைகள். அவரை, மொச்சை, துவரை, புளி முதலியவைகளின் விதைகள் இரட்டைப் பருப்பு விதைகள்.

விதை முளைப்பதற்கு ஆதாரமாய் இருக்கும் பாகத்துக்கு முளை என்று பெயர். இந்த முளை அந்தந்த விதையில் தோலால் மூடப்பட்டிருக்கும். இரட்டைப் பருப்பு விதையில் இரண்டு பருப்பும் ஒன்று சேரும் இடத்தில் முளை இருக்கிறது. அவரை விதையின் தோலை நீக்கிப் பார்த்தால், சமமான இரு பாகங்கள் முளையினால் ஒன்று சேர்க்கப்பட்டிருப்பதைக் காணலாம். இம்மாதிரி நுண்ணிய முளையிலிருந்தே பெரிய மரம் உண்டாகிறது. முளை வளருங் காலத்தில் அதைச் சேர்ந்துள்ள பருப்பே அதற்குச் சகல ஆகாரமுமாம். முளையில்லாவிட்டால் விதை முளைக்காது. நெல்லைக் குத்தி உமியை நீக்கும்போது அதன் முளையும் உதிர்ந்துவிடுகிறது. இதனால்தான் அரிசியின் ஒரு முளை முறிந்ததுபோல் காணுகிறது. இவ்வாறு முளை முறிந்த அரிசி முளையிழந்ததனால் மறுபடி முளைக்காது.

"பண்டு முளைப்ப தரிசியே யானாலும்
விண்டுமி போனால் முளையாதாம்—"

விதைக்கும் விதைகள் கனமாயும் நன்றாய்ப் பருத்து முதிர்ந்தும், மிகப் பழமையாயில்லாமலும்,

உலர்ந்தும் இருக்கவேண்டும். இல்லாவிடில் முளைகள் சரியாய்க் கிளம்பா. அப்படியே கிளம்பினாலும் அச் செடியோ மரமோ தக்க பலன் தராது. விதைகள் நன்றாய் வளர்வதற்கு நிலத்தின் தன்மை ஏற்றதாய் இருக்கவேண்டும். விதை முளைப்பதற்கு வேண்டிய வசதிகள் யாவும் அதில் இருக்கவேண்டும். விதை சரிவர முளைப்பதற்குக் காற்று, உஷ்ணம், தண்ணீர் இம் மூன்றும் அவசியமானவை. ஆரம்பத்திற் சிறிது காலம் முளையின்மேல் சூரிய வெளிச்சம் படக் கூடாது. அதற்காகவே விதையைப் பூமியின் கீழ் நடுகிறோம். ஆனால் அதிக ஆழத்தில் நடக்கூடாது. அவ்வாறு நட்டால் அங்கு காற்று வியாபிக்க இட மிராது. அதனால் முளை வித்திலிருந்து கிளம்பாமல் வெகு நாள் செயலற்றுக் கிடக்கும். அப்போது மண்ணைச் சிறிது கிளறிவிட்டால் காற்று வியாபித்து முளை வெளிக் கிளம்பும்.

விதையை நட்டபின் சிறிது தண்ணீர் ஊற்ற வேண்டும். முளையானது பருப்பினிடம் உணவை யேற்றுக்கொண்டு பெரிதாக வளருகிறது. இம்முளை யின் ஒரு பாகம் மேல் நோக்கியும், இன்னொரு பாகம் கீழ் நோக்கியும் வளருகிறது. இவைகளில் மேல் நோக்கி வளருவதுதான் தண்டு; கீழ் நோக்கி வளரு வது வேர். இப்போது பருப்பு நன்றாய்ப் பிளந்து விரிந் திருக்கும். கீழ் நோக்கிச் செல்லும் வேரானது பல சிறு கிளை வேர்களாகப் பிரிந்து பூமிக்குள் பரவு கிறது. இக்கிளை வேர்கள் முளைக்கு வேண்டிய உண வைப் பூமியிலிருந்து உட்கொண்டு உதவுகின்றன.

ஏழு நாட்களில் முளை கிளம்பி, தண்டின் சிறிது பாகம் பூமிக்கு வெளியில் காணப்படும். இப்போது தண்டின் தலை வளைந்திருக்கும். இரண்டொரு தினத்தில் தண்டு தலை நிமிர்ந்து வளரும். இவ்வாறு வளர்ந்து கொண்டே செல்லுகையில் தண்டின் இரு புறத்திலும் இரண்டு இலைகள் முளைக்கும். இவ்விதம் வளர்ந்த சிறு செடி தாவரம் என்று சொல்லப்படும். இத் தாவரத்தின் வளர்ச்சிக்கு அடிக்கடி தண்ணீர் ஊற்ற வேண்டும்.

இரட்டைப் பருப்பு விதை சிறு இலைத் துளிரை இரண்டு பருப்புகளுக்கும் நடுவில் கொண்டே பூமியிலிருந்து வெளிக்கிளம்பும். ஆனால் இரண்டு நாட்களிலெல்லாம் இரண்டு பருப்புகளும் விரிந்து நடுவிலுள்ள துளிர் விரிந்து பெருக்க ஆரம்பிக்கும். பிறகு இரட்டைப் பருப்பும் கொஞ்ச நாட்களில் தானே உதிர்ந்து விடும்.

ஆனால் ஒற்றைப் பருப்பு விதை இவ்வாறு முளைப்பதில்லை. இரட்டைப் பருப்பு விதையைப் போல், இதன் விதை பிளவு படுவதுமில்லை; பூமிக்கு மேல் கிளம்புவதுமில்லை. விதை பூமிக்குள்ளேயே இருக்கும். முளை மட்டும் பூமிக்கு மேல் தண்டு போல் கிளம்பும். இத் தண்டிலிருந்து, தோல் உரிவது போல் நீண்ட இலைகள் பிரியும். பூமிக்குள்ளிருக்கும் விதையிலிருந்தே வேர்கள் பிரியும். இதற்குக் கிளை வேர்கள் கிடையா. விதை முளைப்பதைப் பற்றி நீங்கள் இயற்கைப் பாடத்தில் நன்ருய்த் தெரிந்து கொண்டிருப்பீர்கள். இவ்வாறு முளைக்கும் விதையின் கதை மிக விநோதமா யிருக்கிறதல்லவா ?



---

## 21. கம்பரும் வம்பரும்

கம்பர் தமிழ் நாட்டு வித்துவ சிரோமணிகளுள் ஒருவர். அவரது பெயரும் புகழும் இன்றும் சிறப் புற்றோங்கி விளங்குகிறது. வால்மீகி முனிவர் எழுதிய இராமாயண இதிகாசத்தைத் தமிழில் செய்யுளா கவே பாடித் தமிழ்ப் பாஷைக்கே அழியாப் புகழை அளித்தவர் இவரே. இவர் ஏறக்குறைய எண்ணூறு வருஷங்களுக்கு முன், சோழநாட்டிலே திருவழுந்தூர் என்னும் கிராமத்திற் பிறந்தார்.

இவருடைய பிறப்பைப் பற்றியும், கம்பர் என்ற பெயர் ஏற்பட்டதைப் பற்றியும் பலவிதமாகச் சொல் லப்படுகிறது. "திருவழுந்தூர், ஆலயத்தில் ஒரு கம்பத்தடியில் அநாதையாய்க் கண்டெடுக்கப்பட்ட வராதலின் அவருக்குக் கம்பர் என்று பெயர் வந் தது" என்று சிலர் கூறுகின்றனர். மற்றும் சிலர், 'அவர் கம்ப நாட்டில் பிறந்தவராகையால் கம்பர் என்ற பெயர் வந்தது' என்கின்றனர். வேறு சிலர், 'தமது உபாத்தியாயரது கட்டளைப்படி அவர் கம்பங் கொல்லையைக் காத்ததனல் அவருக்கு இப்பெயர் ஏற்பட்டது' என்று சொல்லுகின்றனர். இது எவ்வாருயினும், அவரது பெயர் கம்பர் என்பது நிச்சயமே. இவருக்கு வயது வந்ததும் திருவெண்ணெய் நல்லூரிலிருந்த பெருஞ்செல்வரான சடையப்ப வள்ள லது புத்திரருடன் பள்ளிக்குச் சென்று கல்வி பயின் ருர். கம்பர் வெகு விரைவிற் பல நூல்களையும் கற்று, தெய்வ அனுக்கிரகம் பெற்ருர். இளவயதிலேயே கவிபாடும் திறமையும் பெற்ருர்.

கம்பரது கல்விப் பெருமையும் கவித்திறமையும் நாடெங்கும் பரவின. இவரது புகழைக் கேட்ட குலோத்துங்க சோழன், இவரைத் தன் சமஸ்தான வித்வானாக்கிக் கொண்டான். கம்பரது பெயரும் புகழும் சிறந்து விளங்கியது. ஒரு சமயம் சோழன் வடமொழியிலுள்ள இராமாயணக் காவியத்தைத் தமிழில் பாடல்களாகச் செய்யுமாறு அவரை வேண்டினன். அவரும் அவ்வாறே விரைவிற் செய்து முடித்தார். சமஸ்தானத்திலுள்ள புலவர்களும் அரசனும் கம்பரது காவிய நயத்தைப் பெரிதும் புகழ்ந்தனர்.

ஆனாலும் கம்பர் வெளியிலுள்ளாரிடம் நற்சாக்ஷிப் பத்திரம் பெறக்கருதி, சிதம்பரத்திலிருந்த தில்லை மூவாயிரவரிடம் சென்றார். அவர்களில் சிலரைக் கண்டு தான் கோரிவந்த விஷயத்தைக் கூறினர். அதற்கு அவர்கள் அவரது மகிமை யறியாது, “ஐயா! நாங்கள் மூவாயிரவரும் ஒருங்கு சேர்ந்து உமது கவியைக் கேட்டால்தான் நற்சாக்ஷிப் பத்திரம் கொடுக்க இயலும். அவ்வாறு மூவாயிரவரும் ஒன்று சேர்வது மிகவும் கடினம். ஆதலால் நீர் வந்த காரியம் நடவாது” என்று வம்புரையாடினர். கம்பர் வெகு நாட்கள் காத்திருந்தும் அவர்கள் ஒன்று சேரும் சமயம் வாய்க்கவில்லை. ஆகையால், ஆங்குக் கோவிலில் எழுந்தருளியுள்ள கோவிந்தராஜப் பெருமாளிடம் கம்பர் சென்று முறையிட்டார்.

அன்றிரவு பெருமாள் கம்பரது கனவிற் றோன்றி, “அன்பனே! நாளை இந்த மூவாயிரவரில்

ஒருவரது குழந்தை பாம்பு கடித்து இறக்கும். அங்கு எல்லோரும் ஒன்று கூடுவர். அப்பொழுது நீ அங்குச் சென்று, உனது இராமாயணத்தில் நாகபாசப் படலத்திலுள்ள பாடல்களைப் படி. அக்குழந்தை உயிர்த்தெழும்; உனக்கும் நற்சாக்ஷிப் பத்திரம் எளிதில் கிடைக்கும்" என்று கூறியருளினர். மறு தினம் அவ்வாறே மூவாயிரவரில் ஒருவரது குழந்தை அரவு தீண்டி யிறந்ததால் அனைவரும் அங்குக் கூடினர். கம்பர் அச்சமயம் அங்குச் சென்று தமது காவியத்தைக் கேட்குமாறு வேண்டினர்.

இது கேட்ட மூவாயிரவர் அப்போதைய பரிதாப நிலைமையை அறிவித்தனர். அதற்குக் கம்பர் "ஐயன்மீர்! இதிலுள்ள சில பாடல்களைப் படிக்கின்றேன். இறந்த குழந்தை கடவுள் செயலால் உயிர் பெற்று எழும். வருத்தம் ஒழிமின்" என்றார். உடனே அவர்கள் ஆச்சரியமடைந்து, "ஐய! தாம் கூறியபடி குழந்தை உயிர்த்தெழுமாயின், நாங்கள் சந்தோஷத்துடன் உமது காவியத்திற்கு நற்சாக்ஷிப் பத்திரம் அளிக்கிறோம்" என்றனர். கம்பரும் தமது இராமாயணச் சுவடியை அவிழ்த்து, நாகபாசப் படலத்திலுள்ள பாடல்களில் சிலவற்றை வாசித்தார். இறந்த குழந்தை உடனே உயிர்த்தெழுந்தது.

இதைக்கண்ட மூவாயிரவரும் மனமகிழ்ந்து, கம்பரது பாடல்களை யெல்லாம் கேட்டுப் பரவசமடைந்தனர். யாவரும் கம்பரை நோக்கி, "புலவரே! உமது தெய்வத் தன்மையை அறியாது, இவ்வளவு

காலம் உம்மைக் காக்கவைத்து வம்பு செய்தோமே. எங்களை மன்னிக்க வேண்டும்" என்று கூறி நற் சாக்ஷிப் பத்திரமும் கொடுத்தனுப்பினர். பின்னர் கம்பர் பல இடங்களுக்கும் சென்று நற்சாக்ஷிப் பத்திரங்கள் பெற்ருர். ஸ்ரீரங்கத்துக்குச் சென்று ஆயிரக்கால் மண்டபத்தில் கூடிய புலவர் சபையில் தமது இராமாயணக் காவியத்தை அரங்கேற்றினர். அங்கு கவிச் சக்கரவர்த்தி என்னும் பட்டமும் பெற்ருர். பின்னர் சோழ நாடு சென்று, அரசனல் நன்கு மதிக்கப்பட்டு, சிறந்து விளங்கினர். இன்றும் அவரது இராமாயணக் காவியத்தின் பெருமை சிறப்புற்ரேங்கி விளங்குகின்றது.

---

## 22. நவரத்தினங்கள்

ஆடவர் பெண்டிர் யாவரும் ஆபரணங்கள் அணிந்துகொள்ள ஆசைப்படுவர். ஏழைகள் பித்தளை, தாமிரம், வெள்ளி முதலிய உலோகங்களாலும், சங்கு, சிப்பி முதலியவைகளாலும் செய்யப்பட்ட ஆபரணங்கள் அணிந்து கொள்வர். செல்வந்தர்கள் தங்கத்தாலும் நவரத்தினங்களாலும் நகைகள் செய்து அணிவார்கள்.

நவரத்தினங்கள் என்பன, வயிரம், மரகதம், மாணிக்கம், புஷ்பராகம், வைடூரியம், நீலம், கோமேதகம், முத்தம், பவளம் என்பனவாம். இவைகளுள் விலையில் உயர்ந்தது மாணிக்கம். உறுதியாலும், பிற இரத்

தினங்களையும் தன்னையும் அறுக்கக் கூடிய சக்தி உடைமையாலும், பிரகாசத்தாலும் சிறந்தது வயிரமே. இவை ஒவ்வொன்றும் வெவ்வேறு நிறம் உடையன.

வயிரம் வெளித் தோற்றத்திற்கு வெண்மையாய் இருந்தாலும், வானவில்லைப்போல ஏழு நிறங்களையும் மாறி மாறிக் காட்டும் இயல்புடையது. வயிரத்தில் நான்கு வர்ணங்கள் உண்டென்றும், அவை வெண்மை, சிவப்பு, பச்சை, கருமை என்ற நிறங்களால் முறையே அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்று சொல்லப்படும் எனவும் முற்காலத்துத் தமிழ் நூற்களில் சொல்லப்பட்டுள்ளது. ஆனால் இப்போது நீலநிற நீரோட்டமுள்ள வயிரமே சிறந்ததெனக் கருதப்படுகிறது.

மரகதம் நல்ல பசுமை நிறம் உடையது. இது பொன்வண்டின் வயிறுபோலவும், மயிலின் கழுத்துப் போலவும் நிறங்கொண்டிருந்தால் சிறப்பு என்பர். இதன் சுத்தத்தையும் பருமனையும் நோக்கியே இதை விலை மதிப்பர்.

மாணிக்கம் சிவப்பு நிறமுடையது. சிவப்பு நிறம் ஒன்றேயாயினும், அதன் பலவித சாயல் காரணமாக மாணிக்கம் நால்வகைப்படும் என்று முற்காலத்தார் கூறுவர். அரசர், தெய்வம் முதலியோர்களுக்கே மாணிக்கம் உபயோகப்படுகிறது.

புஷ்பராகம் மங்கலான வெண்மை நிறமாயும் மஞ்சள் நிறமாயும் இருக்கும். இதன் விலை வயிரத்தைப் போல் அவ்வளவு அதிகமல்ல. வைடூரியம் தேன் நிற

முடையதா யிருக்கும். நீலம் குயிற் கழுத்துப் போல வும், அவுரிச் சாறுபோலவும் நீலமும் கறுப்பும் கலந்து தோன்றும். கோமேதகம் மஞ்சளும் சிவப்பும் கலந்த நிறமுடையது. மாணிக்கம், புஷ்பராகம், வைடூரியம், நீலம், கோமேதகம் என்ற ஐந்தும் ஒரே கல்லில் உண்டாகக்கூடும் என்று முற்காலத்தினர் கூறியுள்ளார்.

முத்தம் (முத்து) வெண்மை நிறமானது. இது மற்றவைகளைப் போல் சுரங்கங்களிலிருந்து எடுக்கக் கூடியதன்று. கரும்பு, மூங்கில் இவைகளின் கணுக் களில் பல்லாயிரம் வருடங்களில் மிகவும் அரிதாக முத்து உண்டாவதாகப் பழைய தமிழ் நூல்கள் கூறு கின்றன. ஆனல் நாம் விசேஷமாய்க் காண்பது கடல்முத்தே. கடலில் உள்ள சிப்பி என்னும் ஒரு வகைப் பூச்சியின் வயிற்றில் இது உண்டாகிறது. முத்துச் சிப்பிகள் மழைக் காலத்தில் கடல் மட்டத் தில் கிளிஞ்சிலைத் திறந்துகொண்டு மிதக்கும் என் றும், அப்போது மழைத் துளி அதில் விழுந்ததும் தனது கிளிஞ்சிலை மூடிக்கொண்டு அது கடலுக்குள் போய்விடும் என்றும், அத்துளியே நாளடைவில் முத்து ஆகும் என்றும் யாவரும் சொல்லுவர். ஆனல், சிறு கற்கள் சிப்பியின் வயிற்றுட் புகுந்து, அங்கு ஊறும் ஒருவித வெண்மையான நீரால் மூடப் பட்டு முத்தாகிறது என்று சிலர் கூறுகின்றார்கள். எவ்வாறாயினும் முத்து மிகவும் சிறந்தது. விலை மதிப்பிலும் உயர்ந்தது.

பவளம் என்பது பவளக்கொடி என்னும் ஒரு உயிருள்ள தாவரம் போன்ற பூச்சியிலிருந்து எடுக்

கப்படுகிறது. இது ரத்தம்போல் சிவந்த நிறமுடையது. பவளக்கொடி கடலில் உள்ள பாறைகளில் ஒட்டி வளரும் இயல்புடையது. இதை எடுப்பது மிகவும் சிரமம். இதன் நடுவில் துவாரம் செய்து மாலையாக அணிந்து கொள்ளுகின்றனர்.

இக்காலத்தில் நவர்த்தினங்களுக்கும் போலிகள் வந்துவிட்டன. உண்மையான இரத்தினங்களைத் தேடிக் கண்டுபிடிப்பது மிகவும் கஷ்டமாயிருக்கிறது. ஜெர்மனி முதலிய தேசங்களில் உண்மையான இரத்தினங்களைப் போலவே போலி இரத்தினங்களும் செய்யப்பட்டு வருகின்றன.

இரத்தினங்களுக்கு மூலகாரணம், பூமியில் பல்லாயிரம் ஆண்டுகட்கு முன் புதைந்த மரங்களின் கரித்துண்டுகளே. அவை இரத்தினங்கள் ஆனபிறகும், ரஸாயன சாஸ்திர சோதனையால் மீண்டும் கரியாகக் கூடும் என்றும், கரியே இரத்தினம், இரத்தினமே கரி என்றும் நாம் அறிவதால், இவைகளில் மயங்கி வீணே பல்லாயிர ரூபாய்கள் செலவழிப்பதை ஒருவாறு சுருக்க வேண்டுவதவசியம் என்றும் அறியலாம்.

---

## 23. நல்ல நியாயம்

மதுரைமாநகர் முற்காலத்தில் பாண்டிய நாட்டின் தலைநகராய்ச் சிறப்புற்றிருந்தது. அந்நகரில் இருந்து அரசாண்டவர் பாண்டியர் எனப்படுவர். பல நூற்றாண்டுகளுக்கு முன் அந்த அரச வம்சத்தில்

குலோத்துங்க பாண்டியன் அரசாண்டு வந்தான். அவன் மனு நெறி தவறாது அரசாள்பவன். குடிகளுக்கு நேரும் சிறு துன்பத்தையும் போக்க முயலும் இயல் புள்ளவன். தன்னுயிர்போல் மன்னுயிர் காப்பவன்.

அக்காலத்தில் ஒரு வேதியன், தன் மனைவியுட னும் குழந்தையுடனும் திருப்பத்தூரிலிருந்து மதுரைக் குத் திரும்பி வந்து கொண்டிருந்தான். அப்படி வரும் வழியில் பெரிய காடு ஒன்று குறுக்கிட்டது. அக்காட்டு வழியில் நடந்ததாற் களைத்த பார்ப்பினி, தாகந்தீரத் தண்ணீர் வேண்டினாள். வேதியனும், தாயையும் குழந்தையையும் ஒரு ஆலமர நிழலில் இருக்கவைத்து நீர் தேடிச் சென்றான்.

அந்தணன் அங்கு நின்று நீங்கியதும் ஒருபெரும் காற்று அடித்தது. அக்காற்றால், மரத்தின் மேல், முன் எப்பொழுதோ யாவராலோ எய்யப்பட்டுத் தொங்கிக்கொண்டிருந்த அம்பொன்று, பார்ப்பினி யின் மார்பில் விழுந்து குத்தியதால் அவள் இறந் தாள். தாய் இறந்ததை அறியக் கூடாத பால்மண மாறாக் குழந்தை, பிணத்தின்மீது விழுந்து புரண்டு அழுது கொண்டிருந்தது. தண்ணீரோடு திரும்பிய வேதியன் தன் மனைவி இறந்து கிடப்பதையும், குழந்தை புரண்டழுவதையும் கண்டான். சகிக்க முடியாத துக்கத்தை அடைந்தான். வெகு நேரம் வருந்திய பின், இச்செயல் செய்தவன் யாரென் றறிய அம்மரத்தைச் சுற்றி நோக்கினான். வில்லும் கையுமாய் நின்றிருந்த ஒரு வேடனை அங்கு ஒரு புறத்தில் கண்டான்.

உடனே அந்தணன் வயிறெறிந்து, "அடே பாதகா! ஒரு பாவமும் அறியா என் மனைவியை ஏன் கொன்றனை? நீ யாரடா?" என்று கேட்டான். இம்மொழி கேட்ட வேடுவன் திடுக்கிட்டு, "சுவாமி! நான் ஒரு வேடன். இன்று ஒரு வேட்டையும் கிடையாமல் அலைந்து திரிந்து, கடைசியில் இம் மர நிழலில் தங்கினேன். உமது மனைவியை நான் கொல்லவில்லை. அவர்கள் இங்கிருந்ததையும் நான் கவனிக்கவில்லையே" என்று பணிந்து விடையளித்தான். அதற்கு அந்தணன், "ஏடா! வேடா உன்னை யன்றி இங்கு ஒருவரையும் காணேன். நீயோ 'ஏதுமறியேன்' என்கிறாய். குலோத்துங்க பாண்டியனிடம் சென்று நான் நியாயம் கேட்கப்போகிறேன். நீயும் கூடவே வரவேண்டும்" என்றான். வேடனும் ஒத்துக் கொள்ளவே, இருவரும் குழந்தையுடன் மதுரை சென்றனர்.

இவ்வாறு சென்ற வேதியன் குலோத்துங்க பாண்டியனிடம் சென்று முறையிட்டான். அரசன் விஷயத்தை நன்கு விசாரித்தான். வேடனை மிகவும் கண்டித்துக் கேட்டான். வேடனோ 'தனக்கு ஒன்றும் தெரியாது' என்றே கூறினான். பிறகு மந்திரிமார் ஆலோசனைப்படி வேடனைப் பலவிதத்திலும் தண்டித்தான். வேடன் தான் கூறியதையே சாதித்தான். பிறகு அரசன் அந்தணனை நோக்கி, "வேதியரே! நாளை வாரும். உமது வழக்குக்கு முடிவு கூறுகிறேன்" என்றான். அந்தணன் சென்றதும், வேடன் சிறையிலடைக்கப்பட்டான்.

அரசன் பின் சொக்கநாதர் கோவிலுக்குப் போய்க் கடவுளை வணங்கி, "சுவாமி! நான் அறியக் கூடாத எந்த விஷயத்தையும் நீரே தெரிவித்தல் வேண்டும். இந்த வேடன் தான் பார்ப்பினியைக் கொன்றானோ அல்லது அவள் வேறு விதத்தில் இறந்தாளோ என்பது எனக்குத் தெரியவில்லை. வேடனோ 'தான் கொல்லவில்லை' என்று உறுதியாய்க் கூறுகிறான். கண்டித்தும் தண்டித்தும் பயனிலது. வேதியனோ அவன் மேலேயே பழி சுமத்துகிறான். இதில் நியாயஞ் சொல்லவேண்டிய பாரம் உம்முடையதே. என்னால் இயலாது" என்று கூறிப் பிரார்த்தித்தான்.

அவ்வமயம், "அரசனே! இவ்விஷயம் உனக்கு நன்கு விளங்கவேண்டுமாயின், இன்றிரவு செட்டியார் தெருவில் நடக்கும் ஒரு கலியாணத்துக்கு நீயும் அந்த வேதியனும் சென்றால் உண்மை விளங்கும்" என்று ஓர் அசரீரி வாக்குக் கேட்டது. அரசனும் சந்தோஷித்து, கடவுளை வணங்கி அரண்மனை சேர்ந்தான். அன்று இரவு பாண்டியன் மாறுவேடம் பூண்டு, வேதியனை யழைத்துக்கொண்டு செட்டியார் தெருவுக்குப் போனான். அங்கே பெரியதொரு வீட்டில் நடந்து கொண்டிருந்த கலியாண மண்டபத்துக் கருகிற் செல்லாமல், ஓர் ஒதுக்குப் புறத்தில் மறைந்திருந்தனர்.

அங்கு வேறு இருவர் பேசிக்கொண்டிருந்தனர். அவர்களில்,

ஒருவன்:—அண்ணா! இந்த மணமகனது ஆயுள் இன்றோடு முடிவடைகிறது. இவனுடைய உயிரைக்

கொண்டுவர வேண்டுமென நமது தலைவர் கட்டளையிட்டுவிட்டாரே, பாவம்! இவன் உயிரை எப்படிக் கைப்பற்றுவது?

மற்றவன்:— தம்பீ! ஏன் மயங்குகிறாய்? அன்று பகலில், மரத்தின்மேல் தொத்திக் கொண்டிருந்த பழைய அம்பினால் பார்ப்பினியின் உயிரைக் கைப்பற்றவில்லையா? அதுபோல்தான் இதற்கும் ஏதாவது வழி செய்யவேண்டும்.

முதல்வன்:— அப்படியாயின் இப்போதென்ன வழி செய்யலாம்?

இரண்டாமவன்:— இதோ இக்கொட்டத்தில் கட்டியிருக்கும் மாடுகளில், ஒன்று வெருண்டு மணமகன் மீது பாயும்படி செய்து நமது வேலையை முடித்துக் கொள்ளலாம். வா போகலாம்.

இச் சம்பாஷணையை அரசனும் அந்தணனும் கேட்டனர். அப்போது வேதியன், "இம்மணமகன் இவர்கள் பேசியவாறு இறப்பானாயின் நான் இதனை நம்புவேன்" என்றான். மறு வினாடியே கொட்டத்திலிருந்த மாடு ஒன்று கட்டறுத்துக்கொண்டு ஓடி வந்து மணமகனைப் பாய்ந்து குத்தியது. உடனே மணமகன் பிணமகன் ஆயினான். மணக்கோலம் பிணக்கோலம் ஆயிற்று. இதைக் கண்ட இருவரும் அரண்மனை திரும்பினர். பிறகு அரசன் வேடனைச் சிறையினின்றும் விடுவித்து, உண்மையைக் கூறிய அவனுக்கு உபசார வார்த்தைகள் கூறிப் பொருளுதவி செய்தனுப்பினான். அந்தணனுக்கும் பொருளுதவி செய்து, வேறு விவாகம் செய்துகொள்ளச் சொன்னான்.

இதனால், நாம் அறியாமலே தெய்வச் செயலால் சில ஆபத்துக்கள் நேருமென்பதும், தீரவிசாரியா விடில் பழி ஓரிடத்திலும், பாவம் ஓரிடத்திலுமாய் மாறிவிடுமென்பதும் நன்கு விளங்கிற்று. ஆகையால் 'அவனன்றி ஓரணுவும் அசையாது' 'ஆராயாச் செயல் அனர்த்தமே விளைக்கும்' என்னும் முது மொழிகளைக் கவனித்து எதையும் செய்யவேண்டும்.

---

## 24. ஐக்கிய நாணயச் சங்கம்

சிறிய தொழிலாயிருந்தாலும் பெரிய வியாபார மாயிருந்தாலும் எல்லாவற்றிற்கும் பணமே இன்றி யமையாதது. பணம் இல்லாது ஒரு தொழிலும் நடக் காது; தொழிலாளரும் வியாபாரிகளும் முன்னேற்ற மடைய முடியாது. ஏழைகள் தங்களிடமுள்ள சிறிது பணத்தைக் கொண்டு சிறு வியாபாரங்கள் செய்ய விரும்பலாம். பெரிய வியாபாரங்களையும் செய்ய ஆசை கொள்ளலாம். குடும்பச் செலவு, விவசாயம் முதலிய காரியங்களிலும் ஏற்படக் கூடிய காரியங் களுக்கும் அடிக்கடி அதிகப் பணம் வேண்டிவரும். இப்படிப் பலவிதங்களுக்கும் நமக்குத் தேவையா யுள்ள பணத்தை நாமே தேடிக்கொள்ள முடியாமல் குறைந்த வட்டிக்கு யாராவது பணம் கடனாகக் கொடுப்பார்களானால், அதைவாங்கி உபயோகித்துக் கொண்டு பின் சௌகரியப்பட்டபோது அதைத் திருப்பிக் கொடுக்கலாம் என்று நினைப்பது சகஜமே.

இம்மாதிரியான நிலையில் இருப்பவர்களுக்கு உதவிபுரிய வேண்டுமென்றே அரசாங்கத்தார் இக்காலத்தில் ஐக்கிய நாணயச் சங்கங்கள் என்ற பொருள் வரவு செலவுச் சங்கங்களை ஸ்தாபித்திருக்கிறார்கள். இது கூட்டுறவுச் சங்கம். இதில் ஏழை, பணக்காரர், விவசாயிகள், உத்தியோகஸ்தர் முதலிய யாவரும் சேர்ந்து கொள்ளலாம்.

ஒரு கிராமத்தில் உள்ளவர்கள் ஐக்கிய நாணயச் சங்கம் ஏற்படுத்த விரும்பினால், எல்லோரும் ஒன்று கூடி ஆலோசித்து, சங்கம் ஏற்படுத்த வேண்டுமென்று தீர்மானித்துத் தங்கள் விருப்பத்தை ஐக்கியச் சங்க மேலதிகாரிகளுக்கு அறிவிப்பார்கள். அவர்களது விருப்பத்தை அறிந்த மேலதிகாரிகள் தமது உத்தியோகஸ்தர்களில் ஒருவரை அக்கிராமத்திற்கு அனுப்புவர். அவ்வுத்தியோகஸ்தர் அங்குச் சென்று ஐக்கியச் சங்கத்தை ஏற்படுத்தி, அதன் சட்ட திட்டங்களையும், அதை நடத்தும் முறையையும் சங்கத்தின் அங்கத்தினர்களுக்குக் கற்பிப்பார். பின் அங்கத்தினராக விரும்புவோர் ஒவ்வொருவரும் தமது சக்திக் கேற்றவாறு பங்குகள் எடுத்துக் கொண்டு அதற்குச் செலுத்த வேண்டிய பணத்தைச் செலுத்துவார்கள். பங்குப் பணம் செலுத்தாதவர் அங்கத்தினர் ஆகார். இவ்வாறு பல அங்கத்தினர் செலுத்தும் பங்குப் பணமே சங்கத்தின் மூலதனமாகும்.

இவ்வாறு ஏற்படுத்தப்பட்ட சங்கத்தைச் சரிவர நடத்த நிர்வாக சபையை அமைப்பார்கள். இந்நிர்வாக

சபையார்தான், அங்கத்தினரது கடன் விண்ணப் பங்களைப் பெற்றுக் கொண்டு, அவர்கள் நிலைமை யைப் பற்றித் தீர விசாரித்து, தங்களிடம் சேர்ந் திருக்கும் தொகையிலிருந்து கடன் கொடுப்பார்கள். சேர்ந்திருக்கும் தொகை போதாவிடில் தலைமை நிதியி லிருந்து வருவித்துக் கொள்வார்கள். அங்கத்தின ரிடமிருந்து அவ்வப்போது வசூலாகும் பணம் வேறு அங்கத்தினருக்குக் கொடுபடாவிடில், அதனை உடனே தலைமை நிதிக்கு அனுப்பி விடுவார்கள். அதனால் சங்கத்துக்கு வட்டி நஷ்டம் ஏற்படாது.

இம் மாதிரிச் சங்கங்களால் ஜனங்களுக்குப் பெருத்த நன்மையே கிடைக்கிறது. இதில் அங்கத் தினராகச் சேருபவர்கள் தமக்குச் செலவு ஏற்படும் போது, குறைந்த வட்டிக்குக் கடன் வாங்கிக் கொள் ளலாம். இவ்வாறு வாங்கிய கடனைச் சிறிது சிறிதா கச் செலுத்தலாம். அநேகர் இம்மாதிரி சங்கங்களிற் சேராமல் அதிக வட்டிக்குப் பிறரிடம் கடன் படுகிறார் கள். பிறகு வட்டியும் முதலும் சேர்ந்து, பெருந் தொகையாய் விடுவதால் வாங்கிய கடனைக் கொடுக்க முடிகிறதில்லை. கடன் கொடுத்தோர், கடன்பட்டவர் களின் சொத்துக்களை ஏலத்தில் விற்றுத் தமக்குச் சேரவேண்டிய தொகையைப் பெற்றுக் கொள்ளு கிறார்கள். இதனால், அநேகர் ஏழைகளாகின்றனர். பல உத்தியோகஸ்தர் தமது உத்தியோகத்தையும் இழக்கின்றனர். ஆகையால் ஐக்கியச் சங்கங்களிற் சேருவோர் இவ்விதக் கொடுமைகளுக்கு ஆளாகா மல் தப்பலாம்.

தவிரவும், சில கிராமத்தில் உள்ள ஐக்கியச் சங்கத்தார், அங்கத்தினருக்கு வேண்டிய தானியங்கள், உணவுப் பொருள்கள், துணி முதலியவைகளையும் மொத்தமாகவும் நல்லவையாகவும் வாங்கி, சகாயமான விலைக்கு விற்கிறார்கள். இதனால் அங்கத்தினருக்குக் குறைந்த விலையில் நல்ல பொருள்கள் கிடைக்கின்றன. இன்னும் இச்சங்கமானது விவசாயம், கல்வி, கைத்தொழில் முதலிய பல விஷயங்களுக்கும் உதவி புரிகிறது. இவ்விதம் பலவிதத்திலும் நன்மை புரியும் ஐக்கிய நாணயச் சங்கங்கள் எங்கும் ஏற்படுமாறு யாவரும் முயற்சி செய்ய வேண்டும்.

---

## 25. தெல் என்னும் தேசாபிமானி

ஐரோப்பாக் கண்டத்திலே மலைகள் நிரம்பிய சுவிட்சர்லாந்து என்னும் நாட்டில் வில்லியம் தெல் என்னும் ஒரு மலைவாசி இருந்தான். அவன் மிகவும் பலசாலி; பரந்த தோளும் இரும்பைப் போன்ற வலிமையுள்ள தேகமும் கொண்டவன். சிறு வயதிலிருந்தே தன் தேசத்துக்கு நன்மை புரிவதையே நோக்கமாகக் கொண்டவன். தன் குடும்பத்துடன் மலைப் பிரதேசத்தில் வாழ்ந்து வந்தான்.

அந்நாளில் ஆஸ்திரியா தேசத்துச் சக்கரவர்த்தி சுவிட்சர்லாந்து தேசத்தைத் தன் வசமாக்கி, அதை ஆளுவதற்கு ஒரு தலைவனை ஏற்படுத்தியிருந்தான். ஜஸ்லர் என்னும் அத்தலைவன் கொடுங்கோலாட்சியே புரிந்து வந்தான். ஜனங்களைப் பலவிதத்தும் துன்

புறுத்தி வந்தான். சுவிட்சர்லாந்தின் தலைநகரின் மந்தைவெளியில் ஒரு கம்பத்தை நாட்டி, அதில் தன் தொப்பியை மாட்டி, அதற்கு அவ்வழிச் செல்வோர் யாவரும் முழங்காலிட்டு மரியாதை செய்ய வேண்டு மென்று விளம்பரப் படுத்தினன். இவ்வாறு செய்ய அந்நாட்டார் சிறிதும் உடன்படவில்லை. அக் கொடுங்கோலனுடைய கொடுமைக்கு அஞ்சி, சிலர் மரியாதை செய்தனர்.

ஒரு நாள் தெல், தன் வில், அம்பு முதலியவை களுடன் அவ்வழியாய்ச் சென்றான். ஆனால் அவன் அத்தொப்பிக்கு மரியாதை செய்யவில்லை. அதனால் ஜஸ்லருடைய ஆட்கள் அவனைப் பிடித்துத் தமது தலைவனின் முன் நிறுத்தினர். அப்போது ஜஸ்லர் "நமது தொப்பிக்கு மரியாதை செய்யாதவன் நீ தானா?" என்று கேட்டான். அதற்குத் தெல், "உயிரற்ற தொப்பிக்கு மரியாதை செய்வது எனது வழக்கமில்லை" என்று தலை நிமிர்ந்து கூறினன். அது கேட்ட ஜஸ்லர் கோபங்கொண்டு, "அடே! நீ செய்தது பெருந்தவறு. இதற்கு மரண தண்டனையே கிடைக்கும். ஆயினும் நான் ஏற்படுத்தும் ஒரு பந்தயத்தில் நீ ஜெயித்தால், உன்னை விடுதலை செய் கிறேன்" என்றான். "என்ன செய்யவேண்டும்?" என்று வினவினன் தெல்.

அப்போது "அப்பா! அப்பா!" என்று கத்திக் கொண்டு, தெல்லின் குமாரன் அங்குவந்து தெல்லைக் கட்டிக் கொண்டான். அது கண்ட ஜஸ்லர், "அடே! ராஜத்துரோகி! நீ சிறந்த வில்லாளி என்று சொல் லுகிறார்களே! இதோ நிற்கும் உனது மகன் தலை

மீது ஒரு ஆப்பிள் பழத்தை வைப்பேன். அப்பழத்தை உன் அம்பினால் குறி தவறாமல் அடிப்பாயானால் உன்னை விடுவிப்பேன். இல்லாவிடில் சிரச்சேதம் செய்யப்படுவாய்" என்றான். அவ்வாறே தெல்லின் குமாரனது தலையின்மீது பழத்தை வைத்தான்.

தன்னையும் தன் மகனையும் காத்துக்கொள்ள வேறு வழி யில்லாதது கண்ட தெல், வில்லையும் இரண்டு அம்பையும் கையிலெடுத்தான். அவன் கண்களில் நீர் ததும்பியது. அதைத் துடைத்துக்கொண்டு, வில்லில் ஓர் அம்பைப் பூட்டிக் குறி பார்த்தான். தைரியத்தைக் கைவிடாது அம்பெய்தான். அவ்வம்பு பாய்ந்து சென்று, சிறுவனுக்கு யாதொரு கெடுதியும் செய்யாது பழத்தை மாத்திரம் பிளந்து சென்றது. கண்டோர் யாவரும் சந்தோஷித்து ஆரவாரித்தனர்.

இவ்வாறு அவமானமடைந்த ஜஸ்லர், தெல்லை நோக்கி, "இரண்டாவது அம்பு எதற்காக எடுத்துக்கொண்டாய்?" என்று கேட்டான். அதற்குத் தெல், "முதல் அம்பு குறி தவறி என் மகனைக் கொல்லுமாயின், உடனே உன்னைக்கொல்ல எண்ணியே இரண்டாவது அம்பையும் எடுத்துவைத்தேன்" என்று கூறிச் சிரித்தான். இது கேட்ட ஜஸ்லர் கோபங்கொண்டு, தெல்லைச் சிறைப்படுத்தும்படி கட்டளையிட்டான். அவ்வாறே வீரர்கள் தெல்லைப்பிடித்துக் கட்டி, அருகிலிருந்த ஊரி ஏரிக்கரையில் காத்திருந்த படகில் ஏற்றினர்.

அப்படகில் ஜஸ்லரும் ஏறிக்கொண்டான். படகு சிறைச்சாலையை நோக்கிப் புறப்பட்டது. நடு ஏரிக்குச் சென்றதும், பெரும் புயலடிக்க ஆரம்பித்தது. வீரர்களுக்கு அப்பிரதேசம் நன்கு தெரியாமையால், 'படகை எப்பக்கம் செலுத்துவது' என்று தெரியாது விழித்தனர். அப்போது ஜஸ்லர் "வீரர்களே! அந்தச் சிறைப்பட்ட துரோகியின் தளையைத் தறித்து விடுங்கள். அவன் நம்மை எளிதில் கரை சேர்ப்பான்" என்று கூறினன். அவ்வாறே தெல்லின் தளை தறிக்கப்பட்டது.

இங்ஙனம் சுதந்திரமடைந்த தெல், "இப்படகைக் கரையருகிற் கொண்டுபோய், நான் மாத்திரம் இறங்கிக்கொண்டு, இவர்களை ஏரியில் ஆழ்த்தி விடுகிறேன். அப்போது தான் நமது நாடும் க்ஷேமமடையும்" என்று தனக்குள் தீர்மானித்துக் கொண்டான். அவ்வாறே படகு கரையருகிற் சென்றதும் தெல், தான் மாத்திரம் குதித்து, படகு பாறையில் மோதிக் கவிழும்படி செய்தான். ஜஸ்லரும் அவனது வீரரும் மாண்டனர். சுவிட்சர்லாந்து அவனது கொடுங்கோன்மையிலிருந்து தப்பியது. என்னே தெல்லின் தேசாபிமானம்! இவ்வாறு தேசத்திற்கு உபகாரம் செய்த தெல் எல்லோராலும் புகழப்பட்டு, நெடுநாள் சுகமே வாழ்ந்திருந்தான்.

---

## 26. அன்பும் ஆசையும்

சோழ நாட்டிலே சத்தியபுரி என்னும் பட்டினத்தில் பல ஜாதியாரும் பல மதத்தினரும் குடியிருந்து

வாழ்ந்தனர். ஒவ்வொருவரும் தம் தம் மதமே மேலானதென்றும் தாம் வணங்கும் தெய்வமே கடவுள் என்றும் வாதித்தனர். இதனால் ஒருவருக் கொருவர் அடிக்கடி சண்டை யுண்டாயிற்று. ஒவ் வொரு மதத்தினரும் தமது தெய்வத்துக்கு வேண்டி யபடி கோவில்கள் கட்டி, அதற்கு உற்சவங்கள் விமரிசையாய் நடத்தினர். யாவரும் தமது தெய்வமே மேலானது என்று நிரூபிக்கப் பலவாறு முயன் றனர். ஆனால் அவ்வூரில் ஒரு கதியுமில்லாத கூன், குருடு, முடமாகிய எளியோரைக் கவனிப்பார் ஒரு வருமில்லை.

ஒரு நாள் அவ்வூர் மந்தைவெளியில், மிகவும் பிரகாசம் பொருந்திய ஒரு பெரிய தங்கத் தட்டுக் கிடந்தது. அவ்வூர்த் தலைவர்களிற் சிலர் அதை எடுத்து நோக்கினர். அதில் பின் வருமாறு சில வாக்கியங்கள் காணப்பட்டன. "யார் உண்மையான தெய்வபக்தி யுள்ளவர்களோ, யார் கடவுளிடம் உள் ளன்பு கொண்டவர்களோ, அவர்களுக்கே இத்தட்டு உரியது. இவ்வித அன்புள்ளவர் இத்தட்டைத் தொட்டால், இதிலுள்ள எழுத்துக்கள் நன்கு பிரகா சிக்கும். மற்றவர் தொட்டால், எழுத்துக்கள் மங்கும். இதைக் கண்டெடுப்போர் இதற்குரியவரைக் கண்டு பிடித்து, அவரிடம் சேர்ப்பிக்க வேண்டியது" என் றிருந்தது. அதைக் கண்ட தலைவர்கள் அத்தட்டை ஓரிடத்தில் பத்திரப்படுத்தி, அதன் விஷயத்தை ஊரெங்கும் அறிவித்தனர்.

இவ் விஷயத்தைக் கேள்வியுற்ற அநேகர், அத் தட்டைப் பெற முயன்றனர். ஆனால் அவர்கள்

தொட்டதும் தட்டிலுள்ள எழுத்துக்கள் மங்கிவிட்டதால் அவமானமடைந்து திரும்பினார். தட்டு வைக்கப்பட்ட இடத்தருகில் பெரிய உற்சவம்போல் கூட்டம் கூடியது. கூன், குருடு, முடமாகிய பிச்சைக்காரர் பலரும் பிச்சைவாங்க வந்து உட்கார்ந்துவிட்டனர்.



தட்டைப் பெற ஆசைகொண்டு வந்த எவரும் இப்பிச்சைக்காரரைக் கவனிக்கவில்லை. சிலர் அவர்களைத் திரும்பியும் பாராது காசை எரிந்து சென்றனர். நான்கைந்து நாளாயின; ஒருவரும் தட்டைப் பெறவில்லை. பிறகு அவ்வூரிலுள்ள பல மதத் தலைவர்களும் வர ஆரம்பித்தனர்.

தேகமெங்கும் விபூதி பூசி, உருத்திராக்ஷங்களணிந்த ஒரு தேசிகர் தட்டைப் பெற ஆசைகொண்டு வந்தார். ஆனால் அவர் தட்டைத் தொட்ட

தும் அதிலுள்ள எழுத்துக்கள் மங்கின. பின் துவாதச நாமங்கள் தரித்துக்கொண்ட வைஷ்ணவர் வந்தார். அதன் பின் பல்வேறு மதக் குருக்களும், முஸ்லீம் பக்கிரியும், கிறிஸ்தவப் பாதிரியும் வந்தனர். ஆனல் ஒருவருக்கும் அத்தட்டு கிடைக்கவில்லை. 'இத் தெய்வீகத் தட்டு ஒருவருக்குமே கிடைக்காது' என்று எல்லோரும் எண்ணினர்; ஆகையால் அவ்வழியில் செல்வோரை யெல்லாம் அத்தட்டைத் தொடச் சொல்லி அழைத்தனர். முடிவில் ஏழைக் குடியானவன் ஒருவன் வேடிக்கை பார்த்துப்போக அங்கு வந்தான். வந்தவன் பிச்சைக்காரர் கூடியிருந்த இடத்திற்குச் சென்று, மூன்று நாளாய் ஆகாரமில்லாது மூர்ச்சித்துக் கிடந்த முடவன் ஒருவனைக் கண்டான். கண்டதும், உடனே ஓடி அவன் முகத்தில் தண்ணீர் தெளித்து அவனை எடுத்து மடிமீது வைத்துக் கொண்டு, அவனது மயக்கத்தைத் தெளிவித்தான். பிறகு ஊருக்குள் சென்று அவனுக்கு ஆகாரம் கொணர்ந்து கொடுத்தான். அவ் வாகாரத்தை உண்ட முடவன் நன்கு தூங்க ஆரம்பித்தான்.

அப்போது தலைவர்கள் அக் குடியானவனையும் அழைத்துச் சென்று, அத் தெய்வீகத் தட்டைத் தொடச் சொல்லினர். அவ்வாறே அவன் தொட்டவுடன், தட்டிலுள்ள எழுத்துக்கள் முன்னிலும் பிரகாசம் பெற்று விளங்கின. உடனே, "ஏ ஜனங்களே! உங்களைப் பரிசோதிப்பதற்காகவே இத் தட்டுப் போடப்பட்டது. கடவுளைப் பூஜிப்பதாலும் தொழுவதாலுமே எவனும் உண்மை பக்தியுடையவ

ஞான். எவன் தன்னைப்போலவே மற்ற எல்லாப் பிராணிகளையும் கருதி அவைகளிடம் கருணையுடன் நடந்து கொள்கிறானோ, அவனே என்னிடம் உள்ளன்பு கொண்டவன். இங்கு ஒருவராலும் கவனிக்கப்படாது இறக்கும் தருவாயிலிருந்தும், பார்த்தோர் அருவருத்து ஒதுக்கிய மூடவனைக் காத்து ரக்ஷித்த இக்குடியானவனே உண்மைப் பக்தன். அவனுக்கே இத்தட்டு உரியது" என்று ஒரு குரல் எழுந்தது. உடனே எல்லோரும் வெட்கித் தலை குனிந்தனர். குடியானவனோ அத்தட்டை விற்று, வேலை செய்யச் சக்தியற்ற ஏழைகளுக்குப் பங்கிட்டுக் கொடுத்து விட்டு வீடு சேர்ந்தான். பிள்ளைகளே! இக் குடியானவனைப் போலவே நீங்களும் கூன், குருடு முதலியவர்களையும், ஆதரவற்றவர்களையும் சகலப் பிராணிகளையும் அன்புடன் நடத்தவேண்டும்.

---

## 27. குலசேகரர்

சேர நாட்டின் இராஜதானியாகிய கோழிக்கோடு நகருக்கடுத்த திருவஞ்சைக்களம் என்னும் திருப்பதியில் த்ருடவிரதனென்னும் அரசன் செங்கோல் செலுத்தி வந்தான். அவனுக்குத் திருமாலின் அநுக்கிரகத்தால் ஆண் மகவு உண்டாயிற்று. அம்மகவுக்குக் குலசேகரன் என நாமகரணம் செய்து அருமையாக வளர்த்து, நாளடைவில் அரசர்க்குரிய பல கலைகளையும் கற்பித்தான். தக்க வயது வந்ததும் தந்தை குலசேகரருக்கு மகுடம் சூட்டித் தான் தவம்செய்யக் காடு சென்றான்.

இவ்வாறு ராஜ்யபாரம் செய்யும் நாளில் குலசேகரர் பல நூல்களையும் ஆராய்ந்து, விஷ்ணுவே மேலான தெய்வம் எனக் கண்டார். அதுமுதல் சிறந்த விஷ்ணு பக்தராயினர். ஸ்ரீராமரது சரித்திரத்தைக் கூறும் இராமாயணத்தில் அவருக்கு அளவற்ற பிரியம் ஏற்பட்டு, அவர் தமது அரண்மனையிலேயே இராமாயணத்தைப் படிக்கச் செய்து மிகுந்த பக்தியுடன் கேட்டுவந்தார்.

ஒரு நாள் புராணிகர் இராமாயணத்தில் கரதூஷண வதத்தைப்பற்றிச் சொல்ல ஆரம்பித்தார். "சூர்ப்பநகை மூக்கறுபட்டுக் கரதூஷணதியரிடம் சென்று முறையிட, அவர்களும் சினந்தெழுந்து பெருஞ் சேனைகளுடன் புறப்பட்டு வந்தனர். அப்போது இராமபிரான், தன் தம்பி இலக்ஷ்மணனைச் சீதாப்பிராட்டிக்குக் காவலாக வைத்து, துணையின்றித் தாம் ஒருவராகவே அப்படையை எதிர்த்துச் சென்றார்" என்று சொல்லிக்கொண்டிருந்தார். அது கேட்ட குலசேகரர், பரவசராய், "ஆகா! எம்பெருமான் யாதொரு துணையுமின்றித் தனியே செல்கிறாரே" என்று கூறி, உடனே தமது படைகளுடன் புறப்பட வேண்டுமென்று எழுந்தார். மந்திரி முதலாயினோர் திடுக்கிட்டனர். அப்போது புராணிகர் சமயோசித புத்தியுடன், ஸ்ரீராமபிரான் தாமொருவராகவே வெகு சீக்கிரத்தில் அவ்வசுரர்களைக்கொன்று வெற்றி பெற்றார்" என்று முடித்தார். இதைக் கேட்ட குலசேகரரும், தாம் புறப்படுவதை நிறுத்தினர். அது முதல் பிரசங்கியாரும் இராமபிரானது வெற்றியைக் கூறுங்கால் விரித்தும்

அவரது துன்பங்களைக் கூறுங்கால் சுருக்கியும் உரைத்து வந்தார்.

இன்னொரு சமயம் பிரசங்கியார் ஊரிலில்லாத தால், அவரது குமாரர் இராமாயணக் காலக்ஷேபத்தை நடத்தினர். குலசேகரரது இராம பக்தியை அறியாத அவர், இராவணன் சீதையைத் தூக்கிச் செல்லும் பாகத்தை விவரித்துக் கூறுவாராயினர். அது கேட்ட குலசேகரர் சீறியெழுந்து, கடலைக் கடந்து இராவணன் முதலியோரைத் தொலைத்துச் சீதையை மீட்டுவரத் தீர்மானித்து, படைகளோடு இலங்கைக்குப் புறப்பட்டுவிட்டார். வழியில் கடல் குறிக்கிடவே அதனை நீந்திக் கடக்கத் தீர்மானித்து, நீரில் இறங்கிவிட்டார். அப்போது அவரது பக்தியைக் கண்ட இராமபிரான், சீதையோடும் இலக்ஷ்மணரோடும் அவரெதிரில் தோன்றிக் காட்சி தந்து, தாம் இராவணன் முதலியோரைக் கொன்று சீதையை மீட்டு வந்ததைக் கூறி, அவரைக் கரையேற்றி மறைந்தார்.

இவ்வாறு விஷ்ணு பக்தியிற் சிறந்த குலசேகரர் ஸ்ரீரங்கத்தைப் பார்க்க ஆசை கொண்டார். அங்குச் சென்றால் அவர் திரும்புதலரிது என நினைத்த மந்திரிகள் அநேக பாகவதர்களை வரவழைத்து அவர் முன் விடுத்தனர். பகவானைப் பூஜிப்பதைவிட, பகவத் பக்தர்களான பாகவதர்களைப் பூஜிப்பதே மேல் என்னும் உண்மையை அறிந்த குலசேகரர், ஸ்ரீரங்க யாத்திரையை நிறுத்தி, அவ் வடியாரை வழிபட்டார். அப்பாகவதர்களுக்கு வேண்டிய வசதிகள் செய்து கொடுத்து அவர்களுடனேயே காலத்

தைப் போக்கினர். இராஜ்ய பாரத்தைச் சிறிதும் கவனிக்கவில்லை.

இவ்வாறு பாகவதர்களுக்கு ஏற்பட்டிருக்கும் மரியாதையைக் கண்ட மந்திரி முதலான அரண்மனை உத்தியோகஸ்தர்கள், அவ்வடியவரிடம் பொறாமை கொண்டு அவர்களைத் தொலைக்க வழி தேடினர். ஸ்ரீ ராம நவமி உற்சவம் மிகுந்த சிறப்புடன் நடக்க ஆரம்பித்தது. அச் சமயத்தில் ஒரு நாள் ஸ்ரீ ராம விக்ரஹத்துக்கு முக்கிய ஆபரணமாய் விளங்கிய ஒரு நவரத்தின ஹாரத்தை எடுத்து ஒளித்து வைத்தனர். குலசேகரர் ஸ்ரீ ராமபிரானுக்கு அலங்கரிக்கும்போது, அவ் வாபரணத்தைக் காணாது மனம் வருந்தி, அதனைப்பற்றி மந்திரிமாரை விசாரித்தனர். அதற்கு மந்திரிமார், "அரசே! இங்கு ஒருவரும் வரவில்லை. இப் பாகவதர்களில் யாரேனும்தான் எடுத்திருக்கவேண்டும்" என்றனர்.

அது கேட்ட குலசேகரர் மனம் வருந்தி, "இப் பாகவதர் இத் தீத்தொழிலைச் செய்யக் கனவிலும் கருதார். இது நிச்சயம்" என்று கூறி, கருநாகப் பாம்பு அடைக்கப்பட்ட ஒரு குடத்தைச் சபையில் வரவழைத்து, "திரிகரண சுத்தரான இவ்வைதிகர் நிரபராதிகள் என்பது உண்மையாயின் இதனுள் இருக்கும் அரவம் என்னைத் தீண்டாதொழியும்; இல்லையாயின் இது என்னைத் தீண்டிக் கொல்லும்" என்று கடுஞ்சபதம் செய்து, அக் குடத்தினுள்ளே கையிட்டார். அவருக்கு யாதொரு தீமையும் உண்டாகவில்லை. அது கண்ட மந்திரிமார் நடுநடுங்கி, அவரது காலில் விழுந்து உண்மையைக் கூறி,

தம்மை மன்னிக்குமாறு வேண்டினர். குலசேகரரும் அவர்களை மன்னித்து விட்டார்.

பின்னர் குலசேகரர் தனது குமாரனை த்ருட விரதனுக்கு முடிசூட்டி, ஸ்ரீரங்கத்துக்குச் சென்று அங்குப் பல காலம் பக்தியில் ஈடுபட்டிருந்தார். பிறகு பல க்ஷேத்திரங்களுக்கும் யாத்திரைபோனர். முடிவில் பிரமதேச மென்னும் ஸ்தலத்தை யடைந்து, அங்குச் சிலகாலம் தங்கிப் பின் சமாதி யடைந்தார். குலசேகரர் முகுந்தமாலை என்னும் வடமொழி நூலும், பெருமாள் திருமொழி என்னும் தமிழ்ப் பிரபந்தமும் செய்தருளினர். இவர் இவ்விரு மொழியிலும் வல்ல வர். ஸ்ரீராம பக்தியில் குலசேகரருக்கு இணையே இல்லை.

---

## 28. நட்பின் மேன்மை

மதுரையில் சந்திரசேகர பாண்டியன் ஆண்டு வந்த காலத்தில் மதுரை நாயகம் என்ற ஏழை வேளாளன் ஒருவன் இருந்தான். அவனுக்கு இரத்தினம் என்ற குமாரன் உண்டு. பாண்டியன் சபையில் இராஜ நாயகம் என்ற பிரபு இருந்தார். அவர் சோழ நாட்டைச் சேர்ந்தவர். அவருக்குக் கிருஷ்ணன் என்ற குமாரன் உண்டு. இரத்தினமும் கிருஷ்ணனும் மதுரையிலிருந்த ஒரு பள்ளிக்கூடத்திற் படித்து வந்தனர். நாளடைவில் அவர்களிருவரும் நெருங்கிய நண்பராயினர்.

ஒரு சமயம் பள்ளிக்கூடத்தில் பிள்ளைகளெல்லோரும் பந்து விளையாடினர். கிருஷ்ணன் பந்தை

வேகமாக எறிந்தான். அது, உபாத்தியாயரது மேஜைமீதிருந்த கடிகாரத்தின் மேற்பட்டு, கடிகாரம் உடைந்து விட்டது. இதைக் கண்ட பிள்ளைகள் பயந்து தங்கள் தங்கள் இடத்தில் உட்கார்ந்தனர். உபாத்தியாயரும் உள்ளே நுழைந்தார்.

காட்சி-உ-1

இடம்: மதுரைப் பள்ளிக்கூடம்.

காலம்: பிற்பகல்.

பாத்திரங்கள்: கிருஷ்ணன், இரத்தினம், மற்றப் பிள்ளைகள்.

(பிள்ளைகள் சப்தம் செய்யாமல் உட்கார்ந்திருக்கின்றனர். உபாத்தியாயர் வருகிறார்.)

உபாத்: (மேஜையருகிற் சென்று கடிகாரம் உடைந்திருப்பதைக் கண்டு, கோபத்துடன்) அடே!

(பாட்டு)

இராகம் – மோகனம், தாளம் – ஆதி

பல்லவி

யாரடா இது செய்தவன்? —இவ்வறைக்குள்ளே
யாரடா இது செய்தவன்?

அநுபல்லவி

பாரடா இப்போதே பலமாகவே அடித்துப்
பள்ளிக்கூடத்தைவிட்டுத் தள்ளிவிடுவேன் நானே—
(யாரடா)

சரணம்

கோருவீர் நன்மையைக் கொண்டு நீரிப்போதே
கூறுவீர் உண்மையைக் கொஞ்ச நேரத்திலே

ஆரும் இச்சங்கதி கூறுவிடில் நானே
அடிப்பேன் எல்லோரையும் துடிதுடிக்கவே தானே
(யாரடா)

யாரடா இதை உடைத்தவன்? உடனே உள்ள தைச் சொல்லி விடுங்கள். நீங்கள் ஒருவரும் கூறுவிட்டால், எல்லாரையும் தண்டித்து விடு வேன். அடே! ராமா! நீயா உடைத்தாய்?

ராமன்: இல்லை ஐயா!

[உபாத்தியாயர் ஒவ்வொருவராகக் கேட்கிறார். எல்லோரும் 'இல்லை' என்கின்றனர்.]

உபாத்: அடே கிருஷ்ணா! நீயா உடைத்தாய்?

கிருஷ்ணன்: (பயந்து தயங்கிய) நா-ன்-ன்-உடைக்-க வில்லை.

உபாத்: சரி! அப்படியானால் இரத்தினம் தான் உடைத்திருக்கவேண்டும். அடே இரத்தினம்! நீ என்ன சொல்லுகிறாய்?

இரத்: (தனக்குள்) ஐயோ! இதென்ன! எல்லோ ரும் இல்லையென்கிறார்கள். கிருஷ்ணனும் இல்லையென்று சொல்லி விட்டானே. இனி மேல் நானும் இல்லை என்று சொன்னால் உண்மை எப்படியும் வெளிவந்துவிடும். பிறகு உபாத்தியாயர் கிருஷ்ணனை அதிகமாய்த் தண்டிப்பார். ஆகையால் நானே உடைத்ததாக ஒப்புக்கொண்டு என் நேசனைக் காப்பாற்று கிறேன். ஒப்புக்கொண்டால் உபாத்தியாயர் அதிகமாகத் தண்டிக்கவும் மாட்டார்.

உபாத்: என்னடா யோசிக்கிறாய்?

இரத்: (பணிவுடன்)

ஆனந்தக் களிப்பு

(நந்தவனத்திலோராண்டி—என்ற சந்தம்)

ஐயா! இதை நானே செய்தேன்—என்னை
ஆதரித்திடுவீரே அறியாமற் செய்தேன் (ஐயா)
செய்த தப்பிதத்தினை மறந்து—இந்தச்
சிறியேனை மன்னித்துச் சேர்ப்பீரே சிறந்து.
(ஐயா)

ஐயா! இதை உடைத்தவன் நானே. நான் அறியாமற் செய்த இப்பிழையை மன்னிக்க வேண்டுகிறேன். இதற்காக என்னைப் பள்ளிக்கூடத்தை விட்டுத் தள்ளிவிடவேண்டாம்.

[உபாத்தியாயரை வணங்குகிறான்.]

உபாத்: உண்மையாய் நீயா உடைத்தாய்?

இரத்: ஆமாம்! ஐயா!

உபாத்: (பிரம்பைக் கையில் எடுத்துக்கொண்டு) அப்படியானால் உன் கையை நீட்டு.

[இரத்தினம் கையை நீட்டுகிறான். அவன் உண்மையைக் கூறியதற்காக உபாத்தியாயர் மெதுவாக அடித்துவிட்டு]

சரி! போ! இனிமேல் இம்மாதிரி துஷ்டத்தனம் செய்யாதே. நீ ஒழுங்கான பையன். ஆகையால் உன்னைப் பள்ளிக்கூடத்தை விட்டுத் தள்ளவில்லை.

[உபாத்தியாயர் போகிறார். பிள்ளைகள் இரத்தினத்தைப் புகழ்ந்தும் கிருஷ்ணனை இகழ்ந்தும் சொல்லுகிறார்கள்.]

கிருஷ் : (கண்ணீர் விட்டுக்கொண்டே) இரத்தினம்!— ஐயோ,—என் குற்றத்தை ஒப்புக்கொண்டு, நான் பெறவேண்டிய அடிகளை நீ பெற்றாயே. உன் கை மிகவும் வலிக்குமே. பயத்தினால் நான் பொய் சொல்லிவிட்டேன். நீ குற்றத்தை ஒப்புக்கொண்டு என்னைக் காப்பாற்றாவிட்டால், உபாத்தியாயர் எப்படியும் உண்மையைக் கண்டுபிடித்து, என்னைக் கடுமையாய்த் தண்டித்திருப்பார். நீ செய்த இந்த அரிய உபகாரத்தை நான் ஒருபோதும் மறக்கவே மாட்டேன்.

(மற்றுப் பற்றெனக் கின்ற நின்றிருப் பாதமே—என்ற சந்தம்)

குற்றம் நான் செய்ய ஒத்துக்கொண்டு நீ
கொண்டனை கடுந் தண்டனை
உற்றதோர் நண்பன் உன்னைப் போலவிவ்
வுலகிலே இல்லை கண்டனை.

இரத்: சற்றுமே எனக்கேற்காத வார்த்தை
சாற்றுவாய் என்னை ஏற்றுவாய்
பற்றுள நண்பர் யாருமே செய்வர்
பாரில் என்னையேன் போற்றுவாய்

நண்பா! ஒரு சிநேகிதன் செய்ய வேண்டிய கடமையையே நான் செய்தேன். வீணாக ஏன் என்னைப் புகழ்கிறாய்!

கிருஷ் : நீ என்ன சொன்னபோதிலும் இந்த உபகாரத்தை நான் மறக்கவே மாட்டேன். வா. வீட்டுக்குப் போகலாம்.

[இருவரும் போகின்றனர்.]

இவ் விஷயம் நடந்து பதினைந்து வருஷங்கள் ஆயின. இரத்தினம் பாண்டியனது சேனையில் போர் வீரனாய் அமர்ந்தான். கிருஷ்ணனுடைய தந்தை சோழ நாட்டுக்குப் போய்விட்டார். அதனால் கிருஷ்ணன் தன் தந்தையுடனேயே வசித்து வந்தான். இப்படியிருக்கும் சமயம் சோழன் பாண்டிய நாட்டின்மேல் படையெடுத்தான். பாண்டியனும் அவனது வீரர்களும் எதிர்த்து யுத்தஞ் செய்தனர். கடைசியில் பாண்டியன் தோற்று யுத்தத்தில் மடிந்தான். அவனது சேனாவீரரிற் பலர் சிறையாயினர். சோழன் சிறைப்பட்ட வீரர்களைத் தனது தலைநகருக்குக் கொண்டுபோனான். அவர்களில் இரத்தினமும் ஒருவன்.

## காட்சி—2

**இடம்:** தஞ்சையில் அரசன் சபை.

**காலம்:** பிற்பகல்.

**பாத்திரங்கள்:** சோழன், மந்திரி, கிருஷ்ணன், பிரபுக்கள், சேவகர் முதலாயினோர்.

**சோழன்:** மந்திரி! நாம் அன்று சிறைப்படுத்திய பாண்டிய வீரர்களைக் கொண்டுவரச் சொல்லும்.

**மந்திரி:** இதோ மகராஜ்! (சேவகனைப் பார்த்து) அடே சேவகா! நீ சிறைச்சாலைக்குச் சென்று, பாண்டியச் சிறையாளரைக் கொண்டு வரச் சொல்.

**சேவகன்:** உத்தரவு! மகராஜ்!

[போகிறான்]

சோழன் : மந்திரி! அவர்களுக்கெல்லாம் கடுமையான தண்டனை விதிக்க வேண்டும். என்ன சொல்லு கிறீர்?

மந்திரி : அரசே! அவர்கள் தங்கள் அரசனுக்காகச் சண்டை செய்தனர். ஆகையால் அவர்களு டைய வீரத்தையும் ராஜ பக்தியையும் மெச்சி விடுதலை செய்வதே நல்லது.

சோழன் : மந்திரி! நீர் சொல்லுவது சரிதான். ஆயி னும் நமது படை வீரரில் அநேகரைக் கொன்ற அந்த ஒரு வீரனை மாத்திரம் தூக்கிலிட வேண்டும்.

[காவலர் பாண்டியச் சிறையாளரைக் கொண்டு வருகின்றனர்.]

வீரர்களே! உங்களது வீரத்தையும் ராஜ பக்தியையும் மெச்சி உங்களை விடுதலை செய் திருக்கிறோம். ஊர் போய்ச் சேருங்கள். ஆனல் (இரத்தினத்தை நோக்கி) எனது வீரரில் அநே கரைக் கொன்றதற்காக, உனக்கு மாத்திரம் தூக்குத் தண்டனை விதித்திருக்கிறோம். வருகிற ஆடி மாதம் பத்தாவது நாளில் மாலை நான்கு மணிக்குத் தூக்கிலிடப்படுவாய்.

இரத் : அரசே! எனது அரசருக்காக நான் உயி ரைக் கொடுக்கவும் தயார். ஆனல் தாங்கள் ஒரு வேண்டுகோளுக்குத் தயவு செய்யவேண்டும்.

சோழன் : என்ன வேண்டுகோள்?

இரத் : மதுரை நகரில் இருக்கும் எனது வயது சென்ற தாய் தந்தையரைப் பார்த்து வர, உத்

தரவளிக்க வேண்டுகிறேன். அவர்களைப் பார்த்துவிட்டுத் திரும்பி வந்து தண்டனையை ஏற்றுக் கொள்கிறேன்.

சோழன்: ஒருக்காலும் முடியாது. மெதுவாகத் தப்பித்துக் கொள்ளப் பார்க்கிறாயா? உனக்குப் பதில் யாராவது பிணையாக இருந்தால் உன்னை அனுப்புவேன். குறித்த தினத்தில் நீ வராவிடில், அவனைத் தூக்கிலிடுவேன்.

இரத்: ஐயோ, அப்படியானால் நான் என் பெற்றோரைக் காண நினைக்கவும் முடியாது. ஈசா! என்ன செய்வேன்! கண்ணீர் விடுகிறான்.

கிருஷ்: (எழுந்து) அரசே!

(கைசே கடாரி மோரியா என்ற இந்துஸ்தான் மெட்டு)

பல்லவி

தந்தேன் பிணையே வேந்தனே—இந்தத்

அநுபல்லவி

தரணியி லெனது நண்பனுக்காகவே (தந்)

சரணம்

சொந்தநாடு சென்று தாய்தந்தையரைக் கண்டு
துரிதமுடனே இங்கு திரும்பி வருவானென்று
இந்த வேளை சொன்னேன் அந்த நாள் வரைநான்
இங்குச் சிறையிருப்பேன் என் நண்பனுக்காகத் (தந்)

என் நண்பன் இரத்தினம் சொன்ன சொல் தவறான். அவனுக்குப் பதில் நான் இங்குப் பிணையாக இருக்கிறேன். அவன் வரும் வரை சிறை வாசம் செய்யத் தயார். ஆகையால்

தாங்கள் பயமில்லாமல் அவனை மதுரைக்கு அனுப்பலாம்.

சோழன் : கிருஷ்ணு! நீயா இவனுக்குப் பிணை நிற்கிருய்? பெரிய பிரபுவின் குமாரனை உனக்கும் இவனுக்கும் என்ன சம்பந்தம்? நீ ஏன் இதில் தலையிடுகிருய்?

கிருஷ் : அரசே! இரத்தினம் எனது அருமை நேசன். அவனுடைய குணத்தை நான் நன்கறிவேன். அவனுக்கு இந்த உதவியாவது செய்யாவிட்டால் நான் இருந்தென்ன பயன்?

இரத் : நண்பா! எனக்காக நீ ஏன் சிறை சென்று கஷ்டப்படவேண்டும்? என் தலைவிதியை நான் அனுபவித்தே தீரவேண்டும். ஆகையால் நீ உன் வழியே செல்.

சோழன் : கிருஷ்ணு! இப்பொழுதே கூறுகிறேன். உன் உயிரை இழக்க நேரிடும். பிறகு யார் சொல்லினும் நான் கேட்கமாட்டேன். வருகிற ஆடி மாதம் பத்தாம் நாள் மாலை நான்கு மணிக்குத் தூக்கிலிடப்பட்டு இறக்க வேண்டியவன் இரத்தினம். ஆகையால் இக்காரியத்தை நன்ருக யோசித்துச் செய்; பதருதே.

கிருஷ் : அரசே! என் நண்பனுக்காக என் உயிரையும் இழக்கச் சம்மதந்தான். எப்படியாவது அவனுடைய வேண்டுகோளை நிறைவேற்றினல் போதும்.

சோழன் : சரி! உன்னிஷ்டம். குறித்த தினத்தில், சரியான நேரத்தில் அவன் வராவிட்டால், உன்னைத் தூக்கிலிட்டுவிடுவேன்.

கிருஷ்: சந்தோஷம்! — இரத்தினம்! இனிமேல் நீ மதுரை சென்று உன் தாய் தந்தையரைக் காணலாம். உடனே புறப்படு.

இரத்: ஐயோ! இந்த நாட்டில் எனக்கு உதவிசெய்ய யாரும் இல்லையென நினைத்தேன். சிறிதும் தயங்காமல் எனக்கு உதவி செய்ய முன் வந்தாயே. இவ்வுதவியை யான் எப்படி மறப்பேன்?
[கிருஷ்ணனைத் தழுவிக் கண்ணீர் விடுகிறான்.]

நண்பா! வயது சென்ற எனது தாய் தந்தையரைப் பார்த்து விட்டு, உடனே திரும்பி விடுகிறேன். பயப்பட்டாதே.
[மறுபடியும் கிருஷ்ணனைத் தழுவுகிறான்.]

சோழன்: ஏ! காவலர்களே! (கிருஷ்ணனைக் காட்டி) இவனைக் கொண்டு போய்ச் சிறையிலடைத்து வையுங்கள்.

வீரர்: உத்தரவு மகராஜ்!
[காவலர் கிருஷ்ணனைக் கைப்பற்றுகின்றனர்.]

கிருஷ்: (போகும்போதே) நண்பா! நீ சிறிதும் தயங்காதே. கடைசி நாள்வரை இருந்து, உன் பெற்றோரைத் தேற்று. நான் வருகிறேன்.
[போகின்றனர்.]

இரத்: ஈசா! நீயே என் நேசனைக் காக்கவேண்டும்.
[போகிறான்.]

## காட்சி—3

**இடம்:** கொலைக்களம்.

**காலம்:** பிற்பகல்.

**பாத்திரங்கள்:** சோழன், மந்திரி, கிருஷ்ணன், கொலைஞர், சேவகர்.

**சோழன்:** கிருஷ்ண! நான் அன்றே சொன்னேனே. கேட்டனையா, பார்! இப்பொழுது குறித்த நாழிகைக்கு இன்னும் சிறிது நேரமே இருக்கிறது. இரத்தினம் வரமாட்டான். அவனுக்குப் பதில் நீ வீணே இறக்கப்போகிறாய்.

**கிருஷ்:** அரசே! ஏன் வீண் வார்த்தை. என் நண்பனுக்குப் பதில், இப்பொழுதே என்னைத் தூக்கி விடலாம். அவனுக்காக என் உயிரைக் கொடுக்கவே ஆசைப்படுகிறேன். தங்களை மிகவும் வேண்டுகிறேன். உடனே என்னைத் தூக்கி விடுங்கள்.

**சோழன்:** அவசரப்படாதே. இன்னும் நேரம் இருக்கின்றது. அதுவரை பொறுப்போம்.

**மந்திரி:** மகராஜ்! இரத்தினம் அப்படி வராமல் இருக்கமாட்டான். என்ன காரணமோ தெரியவில்லை.

**சோழன்:** (ஏளனமாய்) என்ன காரணம்?—தப்பித்துக் கொள்ளும் காரணந்தான்.

**கிருஷ்:** அரசே! என் நண்பனைப் பற்றித் தாங்கள் கூறுவது சரியல்ல. அவனுக்குப் பதில் நான் இருக்கும்போது, அவனை யிகழ்வானேன்.

சோழன்: சரி! குறித்த நேரம் வந்துவிட்டது. மந்திரி! எல்லாம் தயாராய் இருக்கிறதா?

மந்திரி: மகராஜ்! எல்லாம் தயாராகவே இருக்கிறது. இருந்தபோதிலும் இன்னும் ஒரு நாழிகை பொறுத்துப் பார்க்கலாம்.

சோழன்: சரி! அப்படியே செய்வோம்.

கிருஷ்: அரசே! பொறுக்க வேண்டியதே இல்லை. நிபந்தனைப்படி என்னை உடனே தூக்கிலிடுங்கள்.

சோழன்: ஸ்! சிறிது நேரம் பேசாமலிரு.

மந்திரி! சேவகா! பாதையில் யாராவது வருகிறார்களா என்று பார்த்து வா.

[சேவகன் போய்ப் பார்த்துத் திரும்பி வருகிறான்.]

சேவ: மகராஜ்! ஒருத்தரும் வரலிங்க.

சோழன்: சரி காரியம் நடக்கட்டும். கிருஷ்ணன் தலைவிதி யிது.

மந்திரி: ஐயோ! இனி என்ன செய்வது? கிருஷ்ணா! கடவுளை வேண்டிக்கொள்.

கிருஷ்: சந்தோஷம்! (முழந்தாளிட்டுப் பாடுகிறான்)

"சொற்றுணை வேதியன் சோதி வானவன்
பொற்றுணை திருந்தடிப் பொருந்தக் கைதொழக்
கற்றுணை பூட்டியோர் கடலினிற் பாய்ச்சினும்
நற்றுணை யாவது நமச்சி வாயவே."

ஈசா! என் நண்பனுக்காக உயிரை அளிக்கச் சமயம் வாய்த்ததைப் பற்றிச் சந்தோஷமடைகின்றேன்.

(எழுந்து தூக்கு மேடையிலேறி)

கொலைஞர்களே! உங்கள் வேலையை நடத்துங்கள்.

[கொலையாளிகளில் ஒருவன் கயிற்றைக் கிருஷ்ணனின் கழுத்திலிடுகிறுன். அப்போது 'நிறுத்துங்கள்' 'நிறுத்துங்கள்' என்ற சப்தம் கேட்கிறது. இரத்தினம் வேகமாக ஓடி வருகிறுன்.]

இரத்: நிறுத்துங்கள்! நிறுத்துங்கள்!! இதோ நான் வந்துவிட்டேன்.

[பாய்ந்து மேடைமீது தாவி, கிருஷ்ணனைக் கட்டிக் கொள்கிறுன். இருவரும் மூர்ச்சையாகின்றனர்]

சோழன்: ஆகா! இதென்ன மந்திரி! உடனே இவர்களது மூர்ச்சையைத் தெளிவியும்.

[சேவகன் தண்ணீர் தெளிக்க இருவரும் எழுந்திருக்கின்றனர்.]

இரத்: (கிருஷ்ணனைக் கட்டிக்கொண்டு) ஐயோ! நண்பா! நான் சிறிது தாமதித்து வந்தால் நீ இறந்திருப்பாயே.

[கண்ணீர் விடுகிறுன்.]

கிருஷ்: தாமதித்து வந்தால்தான் என்ன நஷ்டம்?

இரத்: நண்பா! என்ன இப்படிச் சொல்லுகிறுய்? என்னுடைய விதியைக் கேட்டதும், என் தந்தை மூர்ச்சையாய் விழுந்தார். நேற்றுத்தான் அவருக்குத் தெளிவு ஏற்பட்டது. உடனே உத்திரவு பெற்றுக்கொண்டு ஓடோடியும் வந்தேன். நண்பா! உன்னை மறக்கமாட்டேன். (சோழனை நோக்கி) அரசே! இதோ! தண்டனையை ஏற்

கத் தயாராய் நான் வந்து விட்டேன். இனி என் நண்பனை விடுவித்து, என்னைத் தூக்கி விடுங்கள்.

கிருஷ்: நண்பா! என்ன சொன்னுய்? — ஒருக்காலும் இல்லை. குறித்த நேரத்தில் நீ வராததால், அரசர் கட்டளைப்படி தூக்கிலிடப்பட வேண்டியவன் நானே. நீயல்ல. இது நிச்சயம்.

இரத்: நண்பா! (பாடுகிருன்.)

(மார்கழி மாதம் திருவாதிரை நாள்—என்ற சந்தம்)

தப்பிதம் செய்தோரே தண்டனை யடைகுவர்
தாரணி மீதினிலே
ஒப்பிடவே மாட்டார் உன்றன் வாய்மொழி
ஒருவருமே அறிவாய்.

தப்பிதம் செய்தவனுகிய நானே தண்டனை யடையவேண்டும். அப்படியிருக்க உன்னை ஒருவரும் தூக்கிலிட மாட்டார்கள்.

கிருஷ்: அப்படியா!

அறிவேன் யாவுமே அரசரும் அறிவார்
ஆதலால் தண்டனையை
நெறிமுறை உண்மை நியாயப்படி யடைவேன்
நீ சென் றிடுவாயே!

இரத்: செல்லவா இங்கே சீக்கிரம் வந்தேன்? நான்
செல்லேன் உயிருடனே.

கிருஷ்: அல்ல அல்ல என் ஆருயிர் அளிப்பேன் என்
அன்பனைக் காத்திடவே.

இரத்: (சோழனை நோக்கி)

அரசே! தண்டனை அடைவது யாரென
அறைகுவீ ரிப்போதே
அருமை நேசன்தன் ஆருயிர் யிழத்தல்
அநியாயம் அநியாயம்.

கிருஷ்: (சோழனை நோக்கி)
குறித்த நேரம் தவறிக்கொண்டிங்கு வந்ததால்
கொள்வேன் தண்டனை யான்
சிறைபுகும்போது நீர் செப்பிய வார்த்தையை
நிறைவேற்றிடு வீரே.

அரசே! குறித்த நேரத்திற்குள் வந்திருந்தால், தண்டனை அடைய வேண்டியது இரத்தினமே. ஆனால் நேரம் தவறி வந்ததால், இப்போது நியாயப்படி தண்டிக்க வேண்டியது என்னை. நான் சிறைசென்ற சமயத்தில் தாங்கள் கூறிய படி நிறைவேற்றுங்கள்.

இரத்: அரசே! என்ன சொன்னபோதிலும் குற்றம் செய்தவர்களே தண்டனை யடையவேண்டும். ஆகையால் என்னையே தூக்கிலிடவேண்டும்.

சோழன்: (கண்ணீர் விட்டுத் தனக்குள்) ஆகா! உலகில் நண்பர்கள் இருந்தால், இவர்களைப் போல் அல்லவா இருக்கவேண்டும். இவர்களில் யாரைத் தண்டித்தாலும், என்னைப் பாவமே சூழும். ஆகையால் இவர்களை மன்னித்து, உயர்ந்த பதவியில் வைப்பதே எனது முக்கிய கடமையாகும். (வெளிப்படையாய்) நண்பர்களே!—பாடுகிறான்.)

இராகம்—சுருட்டி] [தாளம்—ஆதி

பல்லவி

நானே மன்னித்தேன் உங்களை—நானிலம் போற்ற
நானே மன்னித்தேன் உங்களை

சரணம்

நானே உங்களைப்போல நல்ல நண்பர்கள் காணேன்
தானே உமைத் தண்டிக்கத்தக்க கன்நெஞ்சனல்லேன்
(நானே)

உலகம் புகழும் உம்மை உயர்பதவியில் வைப்பேன்
பலநாளும் சிறப்புடன் பாரினிலே வாழ்வீர். (நானே)

(இருவரையும் தழுவிக்கொண்டு) உங்களைப் போல் உண்மையான நண்பர்கள் நான் எங்கும் கண்டதில்லை. இன்று முதல் நீங்கள் எனக்கும் நண்பர்களே. எனது ராஜ்யத்திலேயே நீங்கள் இருவரும் உயர்பதவி ஏற்று, என்றும் பிரியாத நண்பர்களாய் வாழ்ந்து வரவேண்டும்.—நான் செய்த கொடுமைகளை யெல்லாம் மறந்து விடுங்கள்.

கிருஷ்: அரசே! தாங்களென்ன செய்தீர்கள்? சட்டப்படி விஷயம் நடத்த....நண்பா! என்ன சொல்லுகிருய்?

இரத்: **எல்லாம் இறைவன் செயல்.**

சோழன்: நான் கூறியதைப்பற்றி என்ன சொல்லுகிறீர்கள்?

இரத்: தாய் தந்தையரைக் கவனித்த பின்தான் மற்றவை.

சோழன்: அப்படியே செய்.

கிருஷ் : இரத்தினம்! நானும் உன்னுடன் மதுரை வருகிறேன். உன் தாய் தந்தையரையும் மதுரையையும் பார்த்து வெகு நாளாய் விட்டது. உன் தாய் தந்தையரையும் அழைத்துக்கொண்டு இங்கு வருவோம்.

இரத் : அப்படியே செய்வோம்.

சோழன் : மந்திரி! இவர்களுக்கு வேண்டிய சௌகரியங்கள் செய்வாய்.

மந்திரி : உத்தரவு

[கொலையாளிகள் தவிர யாவரும் போகின்றனர்.]

முதல் கொலையாளி : என்னடாயிது? நம்ம போட்ட கயிறு தப்பிடுச்சே.

இரண்டாமவன் : போடா! போடா!! முன்னே மார்க்கண்டம் மேலே எமம் போட்ட கயிறே தப்பிடுச்சே—நமக்கென்னடா? இண்ணக்கி நரி மொவத்திலே முளிச்சோம். அதனாலே தான் பாவஞ் செய்யாமே தப்பிச்சோம். வாடா போகலாம். எல்லாம் அவஞ் செயற்றதுடா.

முதல் கொலையாளி : ஆமாங்கறேன்.

[போகிறார்கள்.]

---



## 29. படப் பழக்கம்—I

வேற்றுமை ( அப்பியாசம் )

1. படத்தில் ஒரு பசு இருக்கிறது.
2. இதன் பாலை அருந்தலாம்.
3. பசு கயிற்றால் கட்டப்பட்டிருக்கிறது.
3. கன்று பசுவோடு போகும்.
3. பசுவுடன் கன்று நிற்கிறது.
4. பசு, கன்றுக்குப் பால் கொடுக்கும்.
5. பசுவின் பால் வெள்ளை நிறம்.
5. பாத்திரத்தில் பால் கறக்கிறான்.
6. அவனது கையில் பாத்திரம் இருக்கிறது.
6. அவனுடைய பசு அது.
7. படத்தில் ஒரு காளையும் இருக்கிறது.
8. இராமா! படத்தை நன்றாய்ப் பார்.



## 30. படப் பழக்கம்—II

வேற்றுமை ( அப்பியாசம் )

1. படத்தில் ஒரு—— இருக்கிறான்.
2. இவன் கையில்——வைத்திருக்கிறான்.
3. இவன்—— நடந்து போகிறான்.
3. இவன்——பள்ளிக்கூடம் போகிறான்.
3. ——பல பையன்கள் போவார்கள்.
4. எல்லோரும்——போவார்கள்.
5. இவன்——நிறம் வெள்ளை.
5. இவன்——குல்லாய் இருக்கிறது.
6. ——பெயர் ரங்கன்.
6. ——பையில் பென்ஸில் இருக்கிறது.
7. இவன்——படிப்பான்.
8. ——அவனைப்போல் நீயும் இரு.

குறிப்பு:—29-ம் பாடத்தை முதலில் உபாத்தியாயர் அதில் கண்டபடி நடத்தவேண்டும். பிறகு தடித்த எழுத்துக்களாயுள்ள வார்த்தைகளுக்குப் பதில் கோடிட்டுக் கரும்பலகையில் எழுதி அவ் வார்த்தைகளைப் பிள்ளைகள் சொல்லும்படி செய்ய வேண்டும். அதற்குப் பின் தான் 30-ம் பாடத்தை நடத்தவேண்டும். இவ்விரண்டு பாடங்களிலும், ஒவ்வொரு வாக்கியத்திற்கு முன்னும் அந்தந்த வேற்றுமையினுருபைக் குறிக்கும் இலக்கங்களே குறிக்கப்பட்டிருக்கின்றன. இவ்வாறே சில பாடங்கள் நடத்தினல், பிள்ளைகளுக்கு வேற்றுமை பாகுபாடு நன்கு புரியும்.

---

## 31. வாக்குண்டாம்

(ஔவையார் அருளிச் செய்தது)

நன்றி ஒருவர்க்குச் செய்தக்கால் அந்நன்றி
என்று தருங்கொல் எனவேண்டா—நின்று
தளரா வளர்தெங்கு தாளுண்ட நீரைத்
தலையாலே தான் தருத லால். 1

நல்லார் ஒருவர்க்குச் செய்த உபகாரம்
கல்மே லெழுத்துப்போல் காணுமே—அல்லாத
ஈரமிலா நெஞ்சத்தார்க் கீந்த உபகாரம்
நீர்மேல் எழுத்துக்கு நேர். 2

அட்டாலும் பால்சுவையிற் குன்றா தளவளாய்
நட்டாலும் நண்பல்லார் நண்பல்லர்
கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்களே சங்கு
சுட்டாலும் வெண்மை தரும். 3

அடுத்து முயன்றாலும் ஆகுநாள் அன்றி
எடுத்த கருமங்கள் ஆகா—தொடுத்த
உருவத்தால் நீண்ட உயர்மரங்கள் எல்லாம்
பருவத்தால் அன்றிப் பழா. 4

உற்ற விடத்தில் உயிர்வழங்குந் தன்மையோர்
பற்றலரைக் கண்டாற் பணிவரோ—கற்றூண்
பிளந்திறுவ தல்லால் பெரும்பாரம் தாங்கின்
தளர்ந்து வளையுமோ தான். 5

நீரளவே யாகுமாம் நீராம்பல் தான்கற்ற
நூலளவே யாகுமாம் நுண்ணறிவு—மேலைத்
தவத்தளவே யாகுமாம் தான்பெற்ற செல்வம்
குலத்தளவே யாகுமாம் குணம். 6

நல்லாரைக் காண்பதுவும் நன்றே நலமிக்க
நல்லார்சொற் கேட்பதுவும் நன்றே—நல்லார்
குணங்கள் உரைப்பதுவும் நன்றே அவரோடு
இணங்கி இருப்பதுவும் நன்று. 7

தீயாரைக் காண்பதுவும் தீதே திருவற்ற
தீயார்சொல் கேட்பதுவும் தீதே—தீயார்
குணங்கள் உரைப்பதுவும் தீதே அவரோடு
இணங்கி இருப்பதுவும் தீது. 8

நெல்லுக் கிறைத்தநீர் வாய்க்கால் வழியோடி
புல்லுக்கும் ஆங்கே பொசியுமாம்—தொல்லுலகில்

நல்லார் ஒருவர் உளரேல் அவர்பொருட்டு
எல்லார்க்கும் பெய்யும் மழை. 9

பண்டு முளைப்பது அரிசியே யானாலும்
விண்டுமி போனால் முளையாதாம்—கொண்டபேர்
ஆற்றல் உடையார்க்கும் ஆகா தளவின்றி
ஏற்ற கருமம் செயல். 10

மடல்பெரிது தாழை மகிழினிது கந்தம்
உடல்சிறியர் என்றிருக்க வேண்டா—கடல்பெரிது
மண்ணீரும் ஆகா ததனருகே சிற்றூறல்
உண்ணீரும் ஆகி விடும். 11

கவையாகிக் கொம்பாகிக் காட்டகத்தே நிற்கும்
அவையல்ல நல்ல மரங்கள்—சபைநடுவே
நீட்டோலை வாசியா நின்றான் குறிப்பறிய
மாட்டா தவனன் மரம். 12

கான மயிலாடக் கண்டிருந்த வான்கோழி
தானும் அதுவாகப் பாவித்துத்—தானும்தன்
பொல்லாச் சிறகைவிரித் தாடினாற் போலுமே
கல்லாதான் கற்ற கவி. 13

வேங்கை வரிப்புலிநோய் தீர்த்த விடகாரி
ஆங்கதனுக் காகார மானாற்போல்—பாங்கறியாப்
புல்லறி வாளர்க்குச் செய்த உபகாரம்
கல்லின்மேல் இட்ட கலம். 14

அடக்கம் உடையார் அறிவிலர் என்றெண்ணிக்
கடக்கக் கருதவும் வேண்டா—மடைத்தலையில்
ஓடுமீன் ஓட உறுமீன் வருமளவும்
வாடி யிருக்குமாம் கொக்கு. 15

அற்ற குளத்தின் அறுநீர்ப் பறவைபோல்
உற்றுழித் தீர்வார் உறவல்லர்—அக்குளத்தில்
கொட்டியும் ஆம்பலும் நெய்தலும் போலவே
ஒட்டி யுறுவார் உறவு. 16

சீரியர் கெட்டாலும் சீரியரே சீரியர்மற்
றல்லாதார் கெட்டாலங் கென்னாகும்—சீரிய
பொன்னின் குடம்உடைந்தால் பொன்னாகும் என்னாகும்
மண்ணின் குடம்உடைந்தக் கால். 17

ஆழ அமுக்கி முகக்கினும் ஆழ்கடல்நீர்
நாழி முகவாது நானாழி—தோழி
நிதியும் கணவனும் நேர்படினும் தம்தம்
விதியின் பயனே பயன். 18

உடன்பிறந்தார் சுற்றத்தார் என்றிருக்க வேண்டா
உடன்பிறந்தே கொல்லும் வியாதி—உடன்பிறவா
மாமலையில் உள்ள மருந்தே பிணிதீர்க்கும்
அம்மருந்து போல்வாரும் உண்டு. 19

எழுதியவா றேமென் றிராய்மட நெஞ்சே
கருதியவா றோமோ கருமம்—கருதிப்போய்க்
கற்பகத்தைச் சேர்ந்தோர்க்குக் காஞ்சிரங்கா யீந்ததேன்
முற்பவத்திற் செய்த வினை. 20

கற்பிளவோ டொப்பர் கயவர் கடுஞ்சினத்துப்
பொற்பிளவோ டொப்பாரும் போல்வாரே— விற்
பிடித்து நீர்கிழிய வெய்த வடுப்போல மாறுமே
சீரொழுகு சான்றோர் சினம். 21

நற்றா மரைக்கயத்தில் நல்லன்னம் சேர்ந்தாற்போல்
கற்றாரைக் கற்றாரே காமுறுவர்—கற்பிலா
மூர்க்கரை மூர்க்கர் முகப்பர் முதுகாட்டில்
காக்கை உகக்கும் பிணம். 22

நஞ்சுடைமை தானறிந்து நாகம் கரந்துறையும்
அஞ்சாப் புறங்கிடக்கும் நீர்ப்பாம்பு—நெஞ்சிற்
கரவுடையார் தம்மைக் கரப்பர் கரவார்
கரவிலா நெஞ்சத் தவர். 23

மன்னனு மாசறக் கற்றோனும் சீர்தூக்கின்
மன்னனில் கற்றோன் சிறப்புடையன்—மன்னர்க்குத்
தன்தேசம் அல்லால் சிறப்பில்லை கற்றோர்க்குச்
சென்ற விடமெல்லாம் சிறப்பு. 24

கல்லாத மாந்தர்க்குக் கற்றுணர்ந்தார் சொற்கூற்
அல்லாத மார்ந்தர்க் கறங்கூற்றம்—மெல்லிய [றம்
வாழைக்குத் தானீன்ற காய்கூற்றம் கூற்றமே
இல்லிற் கிசைந்தொழுகாப் பெண். 25

சந்தன மென்குறடு தான்தேய்ந்த காலத்தும்
கந்தம் குறைபடா(து) ஆதலால்—தம்தம்
தனம்சிறியர் ஆயினும் தார்வேந்தர் கேட்டால்
மனம்சிறியர் ஆவரோ மற்று. 26

மருவினிய சுற்றமும் வான்பொருளும் நல்ல
உருவு முயர்குலமும் எல்லாம்—திருமடந்தை
ஆம்போது அவளோடும் ஆகும் அவள்பிரிந்து
போம்போது அவளோடும் போம். 27

சாந்தனையும் தீயனவே செய்திடினும் தாமவரை
ஆந்தனையும் காப்பர் அறிவுடையோர்—மாந்தர்
குறைக்கும் தனையும் குளிர்நிழலைத் தந்து
மறைக்குமாம் கண்டீர் மரம். 28

---

## 32. நல்வழி

புண்ணியமாம் பாவம்போம் போனநாட் செய்தவவை
மண்ணிற் பிறந்தார்க்கு வைத்தபொருள்—எண்ணுங்கால்
ஈதொழிய வேறில்லை யெச்சமயத் தோர்சொல்லுந்
தீதொழிய நன்மை செயல். 1

சாதி யிரண்டொழிய வேறில்லை சாற்றுங்கால்
நீதி வழுவா நெறிமுறையின்—மேதினியில்
இட்டார் பெரியோ ரிடாதா ரிழிகுலத்தோர்
பட்டாங்கி லுள்ள படி. 2

இடும்பைக் கிடும்பை யியலுடம்பி தன்றே
இடும்பொய்யை மெய்யென் றிராதே—இடுங்கடுக
உண்டாயி னுண்டாகு மூழிற் பெருவலிநோய்
விண்டாரைக் கொண்டாடும் வீடு. 3

எண்ணி யொருகருமம் யார்க்குஞ்செய் யொண்ணாது
புண்ணியம் வந்தெய்து போதல்லாற்—கண்ணிலான்
மாங்காய் விழவெறிந்த மாத்திரைக்கோ லொக்குமே
ஆங்கால மாகு மவர்க்கு. 4

வருந்தி யழைத்தாலும் வாராத வாரா
பொருந்துவன போமினென்றாற் போகா—இருந்
நெஞ்சம் புண்ணுக நெடுந்தூரம் தாநினைந்து [தேங்கி
துஞ்சுவதே மாந்தர் தொழில். 5

உள்ள தொழிய வொருவர்க் கொருவர்சுகங்
கொள்ளக் கிடையா குவலயத்தில்—வெள்ளக்
கடலோடி மீண்டும் கரையேறி னலென்
உடலோடு வாழு முயிர்க்கு. 6

ஈட்டும் பொருண்முயற்சி யெண்ணிறந்த வாயினுமூழ்
கூட்டும் படியன்றிக் கூடாவாம்—தேட்டம்
மரியாதை காணு மகிதலத்தீர் கேண்மின்
தரியாது காணுந் தனம். 7

ஆற்றுப் பெருக்கற் றடிசுடுமந் நாளுமவ்வா(று)
ஊற்றுப் பெருக்கா லுலகூட்டும்—ஏற்றவர்க்கு
நல்ல குடிப்பிறந்தார் நல்கூர்ந்தா ரானாலும்
இல்லையென மாட்டா ரிசைந்து. 8

ஆண்டாண்டு தோறு மழுது புரண்டாலும்
மாண்டார் வருவரோ மாநிலத்தீர்—வேண்டா
நமக்கு மதுவழியே நாம்போ மளவும்
எமக்கென்னென் றிட்டுண் டிரும். 9

ஒருநா ளுணவை யொழியென்றா லொழியாய்
இருநாளைக் கேலென்றா லேலாய்—ஒருநாளும்
என்னோ வறியா யிடும்பைகூ ரென்வயிறே
உன்னோடு வாழ்த லரிது. 10

---

## 33. விவேக சிந்தாமணி

ஆபத்துக் குதவாப் பிள்ளை
அரும்பசிக் குதவா அன்னம்
தாபத்தைத் தீராத் தண்ணீர்
தரித்திரம் அறியாப் பெண்டிர்
கோபத்தை அடக்கா வேந்தன்
குருமொழி கேளாச் சீடன்
பாபத்தைத் தீராத் தீர்த்தம்
பயன் இல்லை ஏழும் தானே 1

குக்கலைப் பிடித்து நாவிக்
கூண்டினில் அடைத்து வைத்து
மிக்கதோர் மஞ்சட் பூசி
மிகுமணம் செய்தா லும்தான்
அக்குலம் வேற தாமோ
அதனிடம் புனுகுண் டாமோ
குக்கலே குக்கல் அல்லால்
குலந்தனில் பெரிய தாமோ. 2

ஒப்புடன் முகம் மலர்ந்தே
உபசரித் துண்மை பேசி
உப்பிலாக் கூழ் இட்டாலும்
உண்பதே அமிர்த மாகும்
முப்பழ மொடுபால் அன்னம்
முகம்கடுத் திடுவா ராயின்
கப்பிய பசியி னோடு
கடும்பசி ஆகும் தானே. 3

ஆலிலை பூவும் காயும்
அளிதரு பழமும் உண்டேல்
சாலவே பட்சி எல்லாம்
தம்குடி என்றே வாழும்
வாலிபர் வந்து தேடி
வந்திருப்பார் கோடி கோடி
ஆலிலை ஆதி போனல்
அங்குவந் திருப்பார் உண்டோ. 4

கற்பகத் தருவைச் சார்ந்த
காகமும் அமுதம் உண்ணும்
விற்பன விவேகம் உள்ள
வேந்தரைச் சேர்ந்தோர் வாழ்வர்
இப்புவி தன்னில் கிள்ளை
இலவுகாத் ததனைப் போல
அற்பரைச் சேர்ந்தோர் வாழ்வ
தரிதரி தாகும் அம்மா. 5

சங்குவெண் டாம ரைக்குத்
தந்தைதாய் இரவி தண்ணீர்
அங்கதைக் கொய்து விட்டால்
அழுகச்செய் தந்நீர் கொல்லும்
துங்கவக் கரையில் போட்டால்
சூரியன் காய்ந்து கொல்வான்
தங்களின் நிலைமை கெட்டால்
இப்படித் தயங்கு வாரே. 6

தாங்கொணு வறுமை வந்தால்
சபைதனில் செல்ல நாணும்

வேங்கைபோல் வீரம் குன்றும்
விருந்தினர் காண நாணும்
பூங்கொடி மனையாட் கஞ்சும்
புல்லருக் கிணங்கச் செய்யும்
ஓங்கிய அறிவு குன்றும்
உலகெலாம் பழிக்கும் தானே. 7

திருப்பதி மிதியாப் பாதம்
சிவன்அடி வணங்காச் சென்னி
இரப்பவர்க் கீயாக் கைகள்
இனியசொல் கேளாக் காது
புரப்பவர் தங்கள் கண்ணீர்
பொழிதரச் சாகாத் தேகம்
இருப்பினும் பயன்என் காட்டில்
எரிப்பினும் இல்லை தானே. 8

வாழ்வது வந்த போது
மனம்தனில் மகிழ வேண்டாம்
தாழ்வது வந்த தானல்
தளர்வரோ தக்கோர் மிக்க
ஊழ்வினை வந்த தானல்
ஒருவரால் விலக்கப் போமோ
ஏழையாய் இருந்தோர் பல்லக்
கேறுதல் கண்டி லீரோ. 9

---

## 34. செந்தமிழ் நாடு

(கும்மி)

1. செந்தமிழ் நாடெனும் போதினிலே—இன்பத்
தேன்வந்து பாயுது காதினிலே—எங்கள்
தந்தையர் நாடென்ற பேச்சினிலே—ஒரு
சக்தி பிறக்குது மூச்சினிலே. (செந்தமிழ்)

2. காவிரி தென்பெண்ணை பாலாறு—தமிழ்
கண்டதோர் வையை பொருனை நதி—யென
மேவிய யாறு பலவோடத்—திரு
மேனி செழித்த தமிழ்நாடு. (செந்தமிழ்)

3. நீலத் திரைக்கடல் ஓரத்திலே—நின்று
நித்தம் தவம்செய் குமரியெல்லை—வட
மாலவன் குன்றம் இவற்றிடையே—புகழ்
மண்டிக் கிடக்கும் தமிழ்நாடு. (செந்தமிழ்)

4. கல்வி சிறந்த தமிழ்நாடு—புகழ்
கம்பன் பிறந்த தமிழ்நாடு—நல்ல
பல்வித மாயின சாத்திரத்தின்—மணம்
பாரெங்கும் வீசும் தமிழ்நாடு. (செந்தமிழ்)

5. வள்ளுவன் தன்னை உலகினுக்கே—தந்து
வான்புகழ் கொண்ட தமிழ்நாடு—நெஞ்சை
அள்ளும் சிலப்பதிகார மென்றோர்—மணி
யாரம் படைத்த தமிழ்நாடு. (செந்தமிழ்)

சீன மிசிரம் யவனரகம்—இன்னும்
தேசம் பலவும் புகழ்வீசிக்—கலை
ஞானம் படைத்தொழில் வாணிபமும்—மிக
நன்று வளர்த்த தமிழ்நாடு. (செந்தமிழ்)

—பாரதியார்



